**புதிது** நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன் தனிச்சிறந்த சக்தி பானம்!





விட்டமின்-ஸி செறிந்தது




புதிய க்ளுகோன்-ஸி, க்ளுகோஸ் அடங்கியது. உங்கள் குழந்தை சுறுசுறுப்புடன் துள்ளிவிளையாட, விரைந்து சக்திதரும் வசதியான உணவு.

மேலும், விட்டமின்-ஸி செறிந்தது. விட்டமின்-ஸி குழந்தைகளின் பற்கள், எலும்புகள், திசுக்கள் இவை வளர உதவுகிறது.

நான்கு தேக்கரண்டி க்ளுகோன்-ஸி எடுத்து, ஒரு டம்ப்ளர் ஐஸ் தண்ணிரில் இட்டுக் கரைக்கவும். புத்துணர்ச்சியூட்டும் பானம் தயார்—நாசிலிர்க்கும் ஆரஞ்சுச் சுவையுடன்; தினம் இருமுறை உங்கள் குழந்தைக்கு இதைக் கொடுங்கள்.



# க்ளுகோன்-ஸி

GLL-1174

# சில விளம்பரங்கள் சில விஷமங்கள்







**விஷமம் செய்திருப்பவர் சந்திரமௌலி**

பத்திரிகைகளில் வெளியாகும் சில விளம்பரங்களுக்கு விஷமத்தனமாய் வாசகங்கள் எழுதப்பட்டுள்ளன. அது சரி, இவை என்ன விளம்பரங்களில் வந்த படங்கள்? விடை **49** ம்பக்கம்.








○ திறக்கப்படாத போலீஸ் ஸ்டேஷன் எந்த மந்திரிக்காகக் காத்துக்கொண்டிருக்கிறது?

# அரசினர் தோட்டமா?

ஒரு காலத்தில் அரசினர் தோட்டத்திற்குள் நுழைவது என்பது மிகக் கடினமான ஒன்று. அவ்வளவு பாதுகாப்பு இருக்கும்.

இப்போதெல்லாம் இந்தத் தோட்டத்திற்குள் யார் போனாலும் வந்தாலும், கேட்பதற்கு நாதியில்லை. இங்குள்ள பூங்காக்களும், புராதனப் பொக்கிஷங்களும் சரியாகப் பராமரிக்கப் படவில்லை. பிக்பாக்கெட் அடிப்பவர்களுக்கும், கள்ளச் சாராயம் விற்பவர்களுக்கும் ஏற்ற இடமாக இந்தத் தோட்டம் விளங்குகிறது.

அரசினர் தோட்டம் (Govt. Estate), சென்னை நகரின் மத்தியில், முக்கியமான பகுதியில இருக்கிறது. கிழக்கே தொலைக் காட்சி நிலையம் வரையிலும் மேற்கே அண்ணா சாலை வரையிலும் கிட்டத்தட்ட ஒரு சதுர மைல் பரப்பளவு கொண்ட இந்த அரசினர் தோட்டத்துக்குள் பரிகச் சீட்டு அலுவலகம், பப்ளிக் சர்வீஸ் கமிஷன் அலுவலகம் என்று பத்துக்கும் மேற்பட்ட அரசு அலுவலகங்கள் இருக்கின்றன. இவைதவிர, எம். எல். ஏக்களுக்கான புதிய, பழைய விடுதிகள், ராஜாஜி மண்டபம், கலைவாணர் அரங்கம், இருநூறுக்கு மேற்பட்ட வீடுகள் ஒரு நடுநிலைப் பள்ளி ஆகியவை உள்ளன. இந்தப் பகுதிக்குள் நுழைவதற்கு அண்ணா சிலை சிம்ஸன் கம்பெனி எதிரில் இரண்டு வாயில்களும், புதிய எம். எல். ஏக்கள் விடுதியருகில் ஒரு வாயிலும் அரசு விருந்தினர் மாளிகை அருகில வாயிலும் இருக்கின்றன. கலைவாணர் அரங்கு கடந்தும் வரலாம்.

இங்கே பட்டப்பகலில்—

- கல்லூரி மாணவர்கள் பெதடின் ஊசி போட்டுக் கொள்கிறார்கள். (ராஜாஜி ஹாலின் பின்னால்.)
- கள்ளச் சாராயம் விற்கப் படுகிறது (ராஜாஜி ஹாலில் முன்புறத்தில் உள்ள மரங்களிடையே).
- காதலர்கள் (?) அளவுக்கு மீறிப்போய் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.) பழைய எம். எல். ஏ. விடுதியின் முன்புறம்).
- கார், ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்வதற்குத் தோட்டத்திற்குள் உள்ள சாலைகளைப் பயன்படுத்துகிறார்கள்.
- கத்தியைக் காட்டிவழிப் பறி நடக்கிறது. பகலில் தான் இப்படி. என்றால் இரவில் கேட்கவே வேண்டாம். இரவு எட்டு மணிக்கு மேல் இந்தத் தோட்டத்திற்குள் இருக்கும் சாலைகளில் நடப்பதற்கே பயமாக இருக்கிறது. சரியான விளக்கு வசதிகள் கிடையாது. அலிகள் என்று சொல்லப் படுபவர்கள், சாலையில் செல்பவர்களைத் தகாத செயலுக்கு அழைக்கிறார்கள். (இந்த திருபருக்கே அந்த நிலை ஏற்பட்டது.) பிக்பாக்கெட் காரர்கள், கள்ளச் சாராயக் காரர்கள் எல்லாம், பழைய எம். எல். ஏ. விடுதியின் தாழ்வாரங்களைத் தங்கள் படுக்கை யறைகளாக ஆக்கி, அரசினர் தோட்டத்தை ஆண்டிகள் மடமாக உபயோகித்துக் கொண்டிருக்கிறார்கள். இங்கு உள்ள பல்வேறு கட்சி அலுவலகங்களுக்கு வருவோர் எடுத்து வரும் சைக்கிள் கள்திருட்டு போகின்றன.



○ கேட்பாரற்ற நிலையில் நசிந்து கொண்டிருக்கும் புராதன பொக்கிஷம்

# ஆண்டிகள் மடமா?



சமீபத்தில் தி. மு. க. அலுவலகத்திற்கும், ஜனதா அலுவலகத்திற்கும் வந்த இரு தொண்டர்களின் சைக்கிள்கள் திருட்டுப் போய்விட்டன. திருவல்லிக்கேணி போலீஸ் ஸ்டேஷனுக்கு உட்பட்ட பகுதி இது. தாழ்வாரங்களில் படுக்கும் இந்தக் கூட்டங்களைப் பற்றி எத்தனை முறை புகார் கொடுத்தும் போலீஸார் கண்டு கொள்வது கிடையாது. ''கறுப்பு – சிவப்பு கரை போட்ட வேட்டிகள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். 'உங்கள் கட்சி ஆட்கள்தானே'' என்று போலீஸார் சொன்னதற்கு ''அவர்களுக்கும், எங்கள் கட்சிக்கும் எந்த சம்பந்தமும் இல்லை, எங்கள் தொண்டர்கள் அலுவலகத்தில் உள்ளே வேண்டுமானால் படுப்பார்களே தவிர வெளியே படுக்க மாட்டார்கள்'' என்று தி. மு. க. அலுவலகத்தில் கூறிவிட்டார்களாம். ஓரிரு முறை போலீஸார், நடு இரவில் படுத்துக் கொண்டிருப்பவர்களை எழுப்பிக் கொண்டு போய்ப் பிறகு பெற வேண்டியதைப் பெற்றுக் கொண்டபின் விட்டு விட்டார்களாம். இங்குள்ள பிள்ளையார் கோயிலுக்குச் சொந்தமான டேப் ரிகாடர் ஒரு பெரிய பாத்திரம் ஆகியவை திருட்டுப் போயிருக்கின்றன. பல காலமாக வற்புறுத்தியும் பிறகு இந்தத் தோட்டத்திற்குள் போலீஸ் ஸ்டேஷன் ஒன்று ஏற்படுத்தி இருக்கிறார்கள். ஆனால் எல்லா வசதிகளும் வந்த பின்னும் ஏழெட்டு மாதங்களாகத் திறக்கப் படவில்லை. (எந்த மந்திரிக்காகக் காத்துக்கொண்டிருக்கிறதோ!) ராஜாஜி ஹாலின் பின்புறம் உள்ள காங்கிரஸ் கட்சி அலுவலகத்தின் முன்தான் பெரும்பாலான அக்கிரமங்கள் நடக்கின்றன. காங்கிரஸ் அலுவலகம் திறப்பதே கிடையாது. (தமிழக காங்கிரஸில் எந்த கோஷ்டிக்கு இதைத் திறக்க அதிகாரம் இருக்கிறதோ?)

○ ஆண்டிகள் மடமா?

எம். எல். ஏக்களின் புதிய விடுதியிலோ தினமும் அறைகளிலிருந்து பொருட்கள் திருட்டுப் போகின்றன. சமீபத்தில் அ. தி. மு. க. எம். எல். சி. வள்ளிமுத்து ஜனதா எம். எல். ஏ. விஜயராகவன் அறையிலும் கடிகாரங்கள், உடைகள் திருட்டுப்போயிருக்கின்றன.

இங்கு வரும் பெரிய தலைவர்கள் அதிகாரிகள், அமைச்சர்கள், பிரபல எம். எல். ஏக்கள் எல்லோரும் காரில் வந்து விட்டுப் போய் விடுவதால் அவர்களுக்கு நடக்கிற அக்கிரமங்கள் தெரியவருவதில்லை. தெரிந்தாலும் அலட்சியமாய் இருக்கிறார்கள்.

இந்தத்தோட்டத்திற்குள் போவோர், வருவோரைக் கட்டுப்படுத்தி, அங்கு நடக்கும் அக்கிரமங்களை ஒழித்துக் கட்ட போலீஸ் உயர் அதிகாரிகள் நடவடிக்கை எடுப்பார்களா?

—ப்ரியன்

படங்கள்: எம். என். ராஜன்

---

பறவைகளுக்குள்ளும் சங்கேதபாஷைகள் உண்டு. உதாரணமாகக் கோழி முப்பது அடையாள வார்த்தைகள் வைத்திருக்கிறதாம். குஞ்சுகளைச் சாப்பிடக் கூப்பிடும் போதும், அபாய அறிவிப்புச் சொல்லும் போதும், சேவலை நேசத்துடன் அழைக்கும் போதும் அந்த அடையாள வார்த்தைகளைப் பயன்படுத்துமாம்.

நன்றி: ''சண்டே.''
தகவல்: பத்மினி கிருஷ்ணன்.



# இல்லாத வசதியும் இமயச் சுமையும்

டெலிபோன்களில் உள்ள குறைகளைப் பற்றி வேதனையுடன் அதிகாரிகளைக்கேட்டால் கிடைப்பன விளக்கங்கள். விளக்கங்களை விழுங்கியபடி டெலிஃபோன் சந்தாதாரர்கள் பொறுமையுடன் இருக்கவேண்டியதுதானா?

**காலை** ஒன்பது மணி. குரோம்பேட்டை ரயில்நிலையத்தில் மக்களுக்காக வைக்கப்பட்டுள்ள 'டெலிபோன் பூத்.' ஒரே கூட்டமாக இருந்தது. அருகில் சென்றோம். யாரோ ராஜாமணியாம். பாவம் ஒரு மணி நேரமாக நுங்கம்பாக்கத்தில் இருக்கும் தம் தம்பியுடன் தொடர்பு கொள்ள முயற்சி செய்கிறார். அவரது தந்தை இறந்த செய்தியைச் சொல்வதற்காக. பரிதாபம். அவருக்கு இந்தத் தொல்லை பேசியைப் பற்றி ஒன்றும் தெரியாது போலிருக்கிறது! விரல் வீங்கியது தான் அவர் கண்ட பலன். நேரிலேயே போய் விடலாம் என்று ரயில் டிக்கெட் வாங்க ஓடினார்.

பழவந்தாங்கல் பூத் மூடிக் கிடந்தது.

கிண்டி கேட்பாரற்றுக் கிடந்தது. மாம்பலம் ஸ்டேஷனில் இரண்டு பூத்கள் இருந்தன.

ஏதாவது ஒரு பூத்தேனும் வேலை செய்யும்... என்ற நோக்கத்தில் வைத்திருப்பார்களோ?

இங்கு ராமகிருஷ்ணனைச் சந்தித்தோம். இவர் மந்தைவெளியிலிருந்து மாம்பலம் வருகிறார். இவர் கால் இழந்தவர்.

"தினமும் சுமாராக நூறு பேர்கள் போன் செய்கின்றனர். இதில் பதினைந்து அல்லது இருபது ராங்கால்களாக விழுந்து விடுகிறது. போன மாதம் 2,200 போன் கால்கள் தான் பண்ணப்பட்டுள்ளன. ஆனால், 2,450 கால்களுக்குப் பணம்கட்டச் சொல்லி 'பில்' வந்தது. கிரீம்ஸ் ரோடுசென்று பணம் கட்ட வேண்டும். அங்கு எளிதில்பணத்தைப்பெற்றுக் கொள்ள மாட்டார்கள். இன்று வா, நாளை வா, என்று இழுக்கின்றனர். இதனால் மாதத்திற்கு மூன்று அல்லது நான்கு நாட்கள் பூத்தை மூட வேண்டியிருக்கிறது" என்கிறார் ராமகிருஷ்ணன்.

## டெலிபோன் பூத்தா பெட்டிக் கடையா?

எழும்பூர் பாந்தியன் சாலையில் அருங்காட்சியகத்தின் அருகாமையில் அட்டெண்டர் பூத்திலிருந்தார் கோபி. இவரைச் சந்தித்த நேரம் மதியம் மணி ஒன்று. அதுவரை ஐந்து பேர்களே டெலிபோன்செய்திருக்கின்றனர் என்பதைச் சொன்னார்... ஏன்? என்று கேட்க நினைத்தபோதே ரிசீவரைக்கையில்கொடுத்தார்.

டயல் டோனுக்குப் பதிலாக 'கறபுற' என்ற ஓசை காதைப் பிளந்தது. பிறகு கொஞ்ச நேரம் 'மூச்சே' இல்லை. சற்றுக் கழித்து ஒரே மைதலாக இருந்தது. காதை அடைத்து விட்டது. அரை மணி நேரத்திற்கு எதுவும் கேட்கவில்லை.

வருமானமே இல்லையாம் கோபிக்கு. படிப்படியாக இவர் தமது டெலிபோன் பூத்தை பீடி, சிகரெட்கடையாக மாற்றி வருகிறார். போன் செய்ய வருபவர்களை விட, பீடி, சிகரெட் வாங்க வருபவர்களே அதிகம்!

## டிபார்ட்மெண்ட் என்றால் ஒசியா?

டீச் ஸ்டேஷனில் இருப்பவர் அந்தப் பக்கமாக வருவோர், போவோர் எல்லோரையும்... 'வாங்க சார் போன் பண்ணுங்க...' வாங்க சார்...' என்றுகூவிய வண்ணம் இருந்தார். நான்கு பேர்கள் 'போன்' செய்ய வந்தனர். இடையே ஒருவர் அவசரமாக வந்தார். ரிசீவரை எடுத்து நம்பரைச் சுழற்ற ஆரம்பித்தார்.

"நீ யாருய்யா? இடையில வந்து..நம்பரைபோடறே?"

"நான் டெலிபோன் டிபார்ட்மென்ட்..."

○ எம். கோபாலகிருஷ்ணன்



○ டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி



எதையுமேகாதில்வாங்கிக் கொள்ளாமல் பேசிமுடித்து விட்டுத்தான் சென்றார். காசு கொடுக்கவில்லை!

உடலில் ஊனம் உள்ளோருக்கு உதவுவதாகக் கூறி அவர்கள் உள்ளத்திலும் ஊனத்தை உண்டாக்கி இருக்கிறார்கள் டெலிபோன் இலாக்காவினர்.

**ரஜினிகாந்த் என்றால் கொம்பா?**

மவுண்ட் ரோடில் தனியார் விளம்பரக் கம்பெனியொன்றில் டெலிபோன் ஆபரேட்டராகப் பணிபுரியும் சாந்தாவைச் சந்தித்தோம்.

''டயல்டோன் வருவதற்குச் சில நிமிடங்கள் ஆகும். அப்படி வந்தாலும், போட்ட நம்பர் கிடைக்காது. அப்படிக் கிடைத்து விட்டது என்றால் ஒரே கிராஸ்டாக்.

''அவசரமான விஷயத்துக்காக என் பாஸுடன் பேசிக் கொண்டிருந்தேன். நடுவில், ஒரு குரல் குறுக்கிட்டு நான் ரஜினிகாந்த் பேசறேன். போனை 'டிஸ்கனெக்ட் செய்' என்றது. நான் அப்படிச் செய்யவில்லை... 'வைடி போனை!' என்று அதட்டியது அந்தக் குரல்!

''199, 197, 198 கிடைப்பது குதிரைக் கொம்பு. அர்ஜெண்ட் டிரங்கால் காலையில் புக் செய்தால் அலுவலகம் முடியும் நேரம் வரை கூடக் கிடைக்காது'' என்கிறார் சாந்தா.

**நன்கொடை உண்டியல்!**

அசோக் நகரில் பில்லர் அருகில் இருக்கும் பொது டெலிஃபோனை அக்குவேறு



○ குமாரி ஆர். சாந்தா



○ பெங்களூர் ஐ.டி.ஐ.யில் பரிசோதனைகள்



○ டிரங்க் கால்களுக்கான வேண்டுகோள்களைப் பதிவு செய்து இணைப்பு கொடுக்கும் ஊழியர்கள்

○ மேல் நாடுகளில் மிக நவீனமான பாணியிலும் மிக புராதன பாணியிலும் அவரவர் விருப்பத்துக்கு ஏற்ப டெலிபோன்கள் வழங்கப்படுகின்றன.



ஆணிவேராக ஆக்கியிருக்கின்றனர்.

தாம்பரத்தில் உள்ள இரண்டு போன்களிலும் காசுகள் நிரம்பி வழிந்து விட்டன. ஒருவர் காசு போட்டு போன் செய்தபின் பக்கத்தில் இருந்தவர் 'டிஸ்கனெக்ட்' செய்யாமல் வாங்கி ஏதோ செய்து காசு போடாமலேயே நிறைய கால்கள் பேசி விட்டார்.

இன்னும் ஒரு இடத்தில் ஒருவர் குச்சியை வைத்துக் கொண்டு 50 பைசாக்களை அள்ளிக் கொண்டிருந்தார். டெலிபோன் இலாக்காவை யாராவது குறை சொல்ல முடியுமா? எவ்வளவு தாராள மனப்பான்மையுடன் உதவி செய்கிறார்கள்!

**சந்தாதாரர்கள் கவுன்சில்:**

இப்படி ஒரு சங்கம் சூக்கர் நல்ல முத்து தெருவில் இயங்கிக் கொண்டிருக்கிறது. இதன் தலைவர் எம். கோபாலகிருஷ்ணனைச் சந்தித்தோம். அவர் சொன்ன தகவல்:

''தொலைபேசி சந்தாதாரர்களுக்கும், டெலிபோன் இலாகாவினருக்கும் இடையே ஒரு பாலமாகச் செயல்பட்டு, சந்தாதாரர்களின் குறைகளை அவ்வப்போது தொலைபேசி இலாகாவினிடம் எடுத்துச் சொல்லிக் குறைகளைக் களைய முற்படுதல் தான் சங்கத்தின் லட்சியம்.

''சென்னையில் மொத்தம் 21 எக்ஸ்சேஞ்சுகள் இருக்கின்றன. முப்பது நாட்களுக்கு ஒருமுறை ஒவ்வொரு எக்ஸ்சேஞ்சாகச் சென்று டெலிபோன் வைத்திருப்பவர்களின் குறைகளைக் கேட்டு நிவர்த்தி செய்யப் போகிறோம்.

''அதுமட்டுமல்ல, தொலைபேசி அலுவலகச் சட்ட நுணுக்கங்களைச் சந்தாதாரர்களுக்கு எடுத்துச் சொல்லி அவர்கள் உரிமைகளை உணரச் செய்யப் போகிறோம்.''

இதன் கௌரவ செயலாளர் திரு. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி டெலிபோன் என்றாலேயே சீறுகிறார்.

''என்னுடைய டெலிபோனை ஷிப்ட் (வேறு இடத்துக்கு மாற்றல்) செய்ய மூன்று மாதமாக அலைகிறேன். எப்போது போனாலும் ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி அனுப்பி விடுகிறார்கள். ஓவர் பில்லிங் வேறு. போதாக்குறைக்கு இரண்டு மாதத்திற்கு ரூ. 175—ஆக இருந்த வாடகையை ரூ. 200 ஆக உயர்த்தியிருக்கிறார்கள்.

''பில் கட்டத் தவறி டிஸ்கனெக்ட் செய்து விட்டால் திரும்பவும் கனெக்ஷன் பெறுவதற்கு அடிஷனல் செக்யூரிட்டி டெபாசிட்டையும் பில் தொகையையும் கட்டினால் தான் கனெக்ஷனை கொடுப்பார்கள். ஏற்கெனவே நம் டெபாஸிட் தொகை ரூபாய் ஆயிரம் அங்கே இருக்கிறது. பின் எதற்கு இந்த அடிஷனல் செக்யூரிட்டி டெபாஸிட்? எப்படியெல்லாமோ பணத்தை வசூலிக்கிறார்கள் இந்த இலாகாவினர்.''

சங்கத்தின் கௌரவ செயலாளருக்கே இந்தக்கதி!

**மழை பெய்தால் சனி!**

மழை பெய்தால் நமக்கு சனி பிடிக்கிறதோ, இல்லையோ, உடனே சனி பிடித்து விடும் டெலிபோனுக்கு. இருக்கிற எக்ஸ்சேஞ்சுகளே சரியாகச் செயல்படாத இந்த நேரத்தில் புதியதாய் எலக்ட்ரானிக் அது இது என்று திறந்து கொண்டிருக்கிறார்கள். ஏதாவது அனுகூலம் ஏற்படுமா அல்லது உள்ள நிலையும் மேலும் சீர்கெடுமா? பொறுத்துப் பார்ப்போம்.

சென்னை பிரதான சாலை ஒன்றில் டெலிபோன் லைன் இன்ஸ்பெக்டரைச் சந்தித்தோம். அவர் சொன்ன சமாதானம்: ''என்னபண்ணுவது சார்? எங்களுக்கு ஸ்பேர் பார்ட்ஸ் ஒழுங்காகக்

---

## கோபுரத்தில் வாரியார்

ஈரோட்டில் அருள்மிகு மகிமாலீஸ்வரர் கோவில் கோபுரத்தில் திருமுருக கிருபானந்த வாரியார் சிலை இருக்கிறது. இந்தக் கோவில் பழுதடைந்து ராஜ கோபுரம் இல்லாமல் இருந்தது கடந்த நான்கு ஆண்டுகளுக்கு முன் ராஜ கோபுரம் கட்டப்பட்டுச் சிறப்பான முறையில் தற்போது வழிபாடுகள் நடந்து வருகின்றன. ''லட்சரூபாய்க்கு மேல் இக்கோபுரம் கட்டுவதற்கு வாரியார் சுவாமிகள் வசூலி செய்து கொடுத்தார். அந்த நன்றிக் கடனுக்காக அவருடைய சிலையைக் கோபுரத்தில் வைத்தோம்'' என்று கூறினார் கோவில் நிர்வாகி ரா. பா. தங்கவேல்.

தகவல்: மேஜர்தாசன்.
படம்: யுனிவர்சல் தியாகு.



அடுத்தவாரம்

# ஒரு தமிழகக் கனவு

அட்டைப்படக் கட்டுரை

கிடைப்பதில்லை. எது கேட்டாலும் 'நோ ஸ்டாக்' என்று சொல்லி விடுகிறார்கள். கடைசியில் எங்களைத்தான் டெலிபோன் வைத்திருப்பவர்கள் தவறாக நினைக்கிறார்கள்.

''பத்து வருடங்களுக்கு முன்னால் இருபத்து நான்கு மணி நேரமும் ரிப்பேர் சர்வீஸ் இருந்தது. அது இப்போது இல்லை.

''ஒரு குறிப்பிட்ட டெலிபோன் நம்பர் மாறிவிட்டால் நாம் பழைய நம்பருக்கே போன் செய்தாலும் எக்ஸ்சேஞ்சில் புது நம்பர் மாறி விட்டது என்ற தகவலைச் சொல்லி புதிய நம்பரையும் கொடுப்பார்கள். இது நான்கு வருடங்களுக்கு முன்னால் இருந்த வசதி. இப்போது இல்லை. வருடா வருடம் வசதிகள் கூடுவதற்குப் பதில் குறைந்து கொண்டே வருகின்றன.

''எஸ். டி. டி. (S.T.D.) வசதி வேண்டும் என்றால், அதற்கு கனெக்ஷன் பெறுவதற்குப்பணம் கட்ட வேண்டும். எஸ். டி. டி. வேண்டாம் என்று டிஸ்கனெக்ட் செய்யச் சொன்னால் அதற்கும் பணம் கட்ட வேண்டும்.''

மேலும் பேசியிருந்தால் அவரிடம் நிறைய தகவல்கள் கிடைத்து இருக்கலாம். விட்டால் போதும் என்று நழுவி விட்டார்.

### குண்டும் குழியும்

சென்னை மாநகராட்சியினர் புது ரோடைபோட்டு விட்டுப் போவார்கள். உடனே மின் வாரியத்தினர் மூக்கில் வேர்க்குமோ என்னவோ ரோடை நோண்ட ஆரம்பித்து விடுவார்கள். கூடவே டெலிபோன் இலாகாவினரும், வரிந்து கட்டிக் கொண்டு உனக்கு நான் சளைத்தவன் இல்லை என்று மறுபக்கம் நோண்ட ஆரம்பித்துவிடுவார்கள். அப்புறம் குடிநீர் வடிகால் வாரியம்தன்கைவரிசையைக் காட்டும். பிறகு என்ன, சாலை சர்வ நாசம்தான். எத்தனை சைக்கிள் வீல்கள் பெண்டு ஆகுமோ? எத்தனை பேர் இருட்டில் விழுந்து வைப்பார்களோ?

இத்தனைக்கும் இடையில் ஒரு சிறிய ஆறுதல், சமீபத்திய ஃபோன் டைரக்டரி. இதிலும் தவறுகள் நிறையவே இருந்தாலும் போன டைரக்டரி போல் கண்ணைக் குருடாக்காமல் கொஞ்சம் தெளிவாகவும் பெரிதாகவும் அச்சிட்டிருப்பதற்காக இலாகாவுக்கு நன்றி. நன்றி.

—சடக்வாசன்

### இந்தியன எக்ஸ்பிரஸில் எச். டி. ஷெளரி எழுதுகிறார்:

''டெலிபோன் இலாகாவுக்கு உள்ள பெரிய வசதி ஏகபோக்கியம். தட்டிக் கேட்க ஆள் கிடையாது. அது வைத்தது சட்டம். மக்களுக்கு ஃபோன் ஒரு வசதியாக இல்லை. பெரும் சுமையாக விளங்குகிறது. நாட்டிலுள்ள 25 லட்சம் டெலிஃபோன் உபயோகிப்போரில் யாருமே தாங்கள் கொடுக்கும் பணத்துக்கு இணையான வசதி கிடைப்பதாக எண்ணவில்லை. இன்று செய்தித் தொடர்பு விஞ்ஞானத்தில் எத்தனையோ நவீன முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ள போது இந்திய மக்கள் இப்படித் திறமையற்ற டெலிஃபோன் துறையைச் சுமக்கவேண்டியுள்ளது. இதை மாற்றுவதற்கு அவர்களுக்கு எவ்வித உரிமையும் இல்லாதிருக்கிறது. இது மக்களின் அடிப்படைச் சுதந்திரத்தையே பாதிப்பதாகும்.''

டெலிஃபோன் துறைக்கு எதிராக இந்திய மக்கள் சார்பில் சுபரீம் கோர்ட்டில் ஒரு வழக்குப் பதிவாகியுள்ளது. அந்த வழக்கில் தான் மேற்கண்டவாறுகூறப் பட்டுள்ளது. காமன் காஸ் (common cause) என்ற அமைப்பும் வேறு எட்டு நபர்களும் சேர்ந்து இந்த வழக்கைத் தொடுத்திருக்கிறார்கள். இவர்கள், டெலிஃபோன் இலாகா திறமையற்றதாக இருப்பினும் மிக அதிகமான வருவாய் பெறுவதைச் சுட்டிக் காட்டியுள்ளனர். மீட்டர்கள் சரியாக இயங்காததாலும், ராங் நெம்பர்கள் மூலமாகவுமே டெலிபோன் இலாகாஏராளமான வருவாய் பெறுகிறது. தவிர கட்டண விகிதங்கள் மிக அதிகமானவை. வேறு வழியின்றிக் கேட்டதைக் கொடுத்தே ஆகவேண்டியிருக்கிறது. இதனால் எல்லாம் அபரிமிதமான லாபம் பெற்றும் அந்தத் தொகை முழுவதும் டெலிஃபோன்

வசதிகளைச் சீர்ப்படுத்தப் பயன்படுத்தப்படுவதில்லை. பெரும்பகுதி தபால் இலாகாவின் நஷ்டத்தை சரிக்கட்டவே பயனாகிறது. நல்ல லாபம் அடைந்து வரும்போதே டெலிஃபோன் வாடகையும் கட்டணங்களும் ஆண்டுதோறும் அதிகப்படுகின்றன. இதை பட்ஜெட்டுக்கு முன்பாகவே அரசாங்க உத்தரவு மூலமே நிறைவேற்றுவது அநீதி.

**லட்சம் புகார்கள்!**

இந்திய தபால் தந்தி சட்டப்படி டெலிஃபோனை நல்லபடியாக இயங்கும் நிலையில் வைத்திருக்க வேண்டியது இலாகாவின் கடமை. ஆனால் சட்டபூர்வமான இந்தப் பொறுப்பை இலாகா நிறைவேற்றுவதே இல்லை. இது அரசியல் சாசனத்துக்கே முரணானது.

தவறான பில் தொகை பற்றி ஒரே ஒரு ஆண்டில் மட்டும் 1.3 லட்சம் புகார்கள் டெலிஃபோன் இலாகாவுக்கு அனுப்பப்பட்டுள்ளன. இவற்றில் 40,000 புகார்கள் நியாயமானவை என்று இலாகாவே எடுத்தளவில் விவாதத்துக்கு இடமின்றி ஒப்புக் கொண்டிருக்கிறது! முதலில் டெலிஃபோன் பில் பணத்தைக் கட்டிவிட்டுப் பிறகு பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்று இலாகா வற்புறுத்துவது மற்றுமொரு அநீதி. பில் தவறு என்பதால் பணம் கட்டாமலிருந்தால் இணைப்பு உடனே துண்டிக்கப்படும். டில்லியில் மட்டுமே ஒரே ஆண்டில் 5000 ஃபோன் தொடர்புகள் துண்டிக்கப்பட்டன. இவர்களுக்கு எழுத்து மூலம் நோட்டீஸ் தரக்கூட இல்லை. ஃபோனில் எச்சரித்ததோடு சரி!

எஸ்.டி.டி. மற்றொரு தலைவலி. 100 எஸ்.டி.டி. போட்டால் எட்டுதான் கிடைக்கும் கல்கத்தாவில். 20 கிடைக்கும் பம்பாயில். 25 கிடைக்கும் டில்லியில்!

டெலிஃபோனில் குறை ஏற்பட்டால் அது சரிப்பட சராசரியாக 6–7 மணி நேரம் ஆகிறது. பம்பாயில் 20 மணி நேரம் ஆகிறது. கல்கத்தாவிலோ 54 மணி நேரம் பிடிக்கிறது. 100 டெலிஃபோன் இருந்தால் அவற்றில் 50–60 வரை சரியாக இயங்கவில்லை என்று புகார் (கம்ப்ளெய்ண்ட்) வருகிறது. இந்தப் புள்ளி விவரங்கள் டெலிஃபோன் இலாகாவே கொடுத்தவை. எனவே நிஜமான நிலைமை இதைவிட மோசமாகவே இருத்தல் வேண்டும்.

**ராங் நம்பரால் லாபம்**

ஆம்புலன்ஸ், போலீஸ், நெருப்பு அணைப்புப்படை போன்ற அத்தியாவசிய இலாகாக்களைக் கூட அவசரத்துக்கு ஃபோனில் அழைக்க முடியாத பரிதாப நிலையில் இந்திய மக்கள் இருக்கிறார்கள்.

நாடாளுமன்றத்தின் எஸ்டிமேட் கமிட்டி முன்பு, டெலிஃபோன் இலாகா ஒரே ஒரு ஆண்டில் மட்டும் ராங் நெம்பர்கள் மூலமே ரூ. 25 லட்சம் சம்பாதித்ததாக வாக்கு மூலம் தந்திருக்கிறது! இது மிகவும் குறைவான மதிப்பீடு. உண்மையில் இதை விட 100 அல்லது 200 மடங்கு அதிகமாக இருக்கும்!

டிரங்க்கால் புக்கிங்கில் ஏகப்பட்ட கோல்மால் நடக்கிறது. சில டெலிஃபோன் ஆபரேட்டர்களைக் கவனித்துக் கொண்டால் எத்தனை டிரங்கால்கள் வேணுமானாலும் இலவசமாகவும், துரிதமாகவும் கிடைக்கும்! தர்ம, நியாய வழியில் காத்திருப்பவர்கள் காத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான்! டெலிஃபோன் இலாகாவின் ஆய்வுப்படியே டிரங்க்கால் தாமதங்கள் 4 முதல் 6 மணி நேரம் வரை ஆகிறது.

டெலிஃபோன் வசதியைப் பெற விரும்புவோர் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றனர். 1975–ல் போன் கனெக்ஷன் கிடைக்கக் காத்திருப்போர் எண்ணிக்கை 2.5 லட்சமாக இருந்தது. இன்று இது 7 லட்சமாக உயர்ந்துள்ளது. இன்னும் இரண்டு ஆண்டுகளில் இது 10 லட்சமாகவும் 1990–ல் 70 லட்சமாகவும் உயரலாம் என்பது மதிப்பீடு! ஃபோன் கனெக்ஷனுக்கான அப்ளிகேஷனைத் தரும்போதே அதை ரிஜிஸ்டர் செய்யவே கணிசமான பணம் கட்ட வேண்டும் என்பதை நோக்குகையில் நமது ஃபோன் இலாக்கா ஃபோன் வசதி செய்து தராமலிருக்கவே பணம் குவிப்பது புரியும்! இந்தத் திறமை வேறு யாருக்கு வரும்!

---

மிகக்குறைந்த நாட்களுக்குள் 1000 ரன்களுக்குமேல் எடுத்தவர்களின் வரிசையில் நான்காவதாகச் சேர்கிறார்! மொஹிந்தர் அமர்நாத்.

பாகிஸ்தான், மேற்கு இந்திய அணிகளை எதிர்த்து ஆடிய 10 டெஸ்ட்களில் மொஹிந்தர் 130 நாட்களில் 1,012 ரன்களை எடுத்துள்ளார். மற்றவர்களின் விவரம்:

சுனில் கவாஸ்கர் 78–79–ல் 6 டெஸ்ட்கள் ஆடி 78 நாட்களுக்குள் 1,014 ரன்கள். மேற்கு இந்தியர் விவியன் ரிச்சர்ட்ஸ் 1976–ல் 6 டெஸ்ட்களில் ஆடி 129 நாட்களுக்குள் 1,093 ரன்கள்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பே இங்கிலாந்து வீரர் வால்ட்டர் ஹேமாண்ட் 7 டெஸ்ட்கள் ஆடி 120 நாட்களில் 1,003 ரன்களை எடுத்துள்ளார்.

நன்றி: 'விஸ்டம்.' தகவல்: ஆர். அரிகோபி.



''தரத்தோடு விலையையும்
எம் மாதிரி நோட்டம்
பார்த்து வாங்குங்க,
கெட்டிக்காரி நீங்கதான்''










# ''நியூட்ரமுல் தான் என் கைராசி.''

''கண்ணை மூடிக்கிட்டு முடிவு பண்றவ நான் இல்லை. கண்முழிப்பா கவனிக்கறவளுக்குக் கிடைக்குது சகாய விலையிலே தரமான பண்டம்-- இதோ எனக்கு நியூட்ரமுல். ISI தரம் இருந்தாகணும், இருக்கா பார்ப்பேன். நியூட்ரமுல் ஒண்ணுக்குத் தானே அது இருக்கு, வேறெந்த கோக்கோ மால்ட் பானத்துக்கும் கிடையாதே. அதுவும், குடும்ப மனசுப்போல வாங்கக் குடுத்து வெச்சவ நான், எங்க வீட்டுலே கண்டிப்பா நியூட்ரமுல் தான் வேணும்''.

''விளம்பரக் கதைகள் எல்லாம் என் கண்ணுலே மண்ணைத் தூவும்படி விடமாட்டேன், எதையுமே நான் நேரிலே பார்த்துத்தான் வாங்குவேன்''

| | |
|---|---|
| நியூட்ரமுல் | ரூ. 13.34 |
| போர்ன்விடா | ரூ. 20.48 |
| மால்டோவா | ரூ. 20.45 |
| பூஸ்ட் | ரூ. 21.57 |

மார்ச் '84 நிலவரப்படி 500 கி. கார்-ட்டன்களின் பேக்குகளுக்கான அதி-போக உச்ச விலைகள். வரிகள் தனி.




daCunha/GCM/109(A)/84/TM

# மக்கள் குற்றச்சாட்டு














**கல்கி**

1984 ஜூன் 24
மலர்: 42 இதழ்: 47
ரக்தாக்ஷி ஆனி 10



# பிச்சை போடுகிறார்கள்!

அமரர் கல்கியின் அலையோசை, நூல் வடிவம் பெற்றுத் தமிழ்நாட்டில் நான்கைந்து பதிப்புக்கள் வெளியாகியும் மொத்தத்தில் ஐயாயிரம் பிரதிகள் விற்றிருக்கலாம். அதே அலையோசை ருஷ்யமொழியில் பெயர்க்கப்பட்டு மாஸ்கோவில் அச்சாகி முதல் பதிப்பிலேயே ஐந்து லட்சம் பிரதிகள் விற்பனையாயின! பார்த்திபன் கனவு சாகித்திய அகாதமியினால் அனைத்து இந்திய மொழிகளில் பெயர்க்கப்பட்டும் கூட மொத்தத்தில் பத்தாயிரம் பிரதிகள் விற்பனையாகி இருக்குமா, சந்தேகமே!

இந்திய மக்களில் புத்தகங்களை வாங்குகிற சக்தி உள்ளவர்கள் மிகவும் குறைவு. அப்படி வசதி உள்ள சொற்பம் பேரும் ஆங்கிலப் புத்தகங்களை வாங்கிப் படிப்பதையே பெருமையாகக் கருதுகின்றனர். பிராந்திய மொழி நூல்களைப் படிக்கும் ஆர்வமுள்ளவர்களிடம் வாங்கும் சக்தி இல்லை. இவர்கள் நூலகங்களையே நம்பியிருக்கிறார்கள். இந்தச் சூழலில் சினிமாவும் டி.வி.யும் மட்டமான பத்திரிகைகளும் வேறு மலிவான விதங்களில் மக்களின் மனத்தைக் கவர்ந்து அவர்கள் நேரத்தை அபகரித்து வருகின்றன. படிக்கிற பழக்கமே நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. இந்நிலையில் நூலகங்கள், அவற்றின் நிர்வாகிகளின் பொறுப்பு பல மடங்காகிறது. வசதியாக அமர்ந்து, விச்ராந்தியாக, சுவாரஸ்யமான நல்ல நூல்களைப் படிக்கலாம்; புதிது புதிதாக நூல்கள் பல நூலகங்களுக்கு வரும் என்ற நம்பிக்கை மக்களுக்கு ஏற்படவேண்டும். அமெரிக்காவில் மக்களை நூலகங்களுக்கு ஈர்க்க என்னென்னவோ நூதன உத்திகளைக் கையாளுகிறார்கள். நினைத்தால் ருஷ்யாவுக்கும் அமெரிக்காவுக்கும் பறந்து திரும்பும் நமது அமைச்சர்கள் இதெல்லாம் அறியாதவர்கள் அல்ல. இருப்பினும் இங்கே நூலக இயக்கத்தில் நூலான்படை படர விட்டது தான் வியப்பு. இதை எடுத்துக் காட்டியும் புதிய நூல்களை வாங்காதபோது நூலகக் கட்டிடங்களை ஆளும் கட்சிப் பிரமுகர்கள் திறந்து வைக்கிறார்களே என்று இடித்துக் காட்டியும் பேசியதில் அமைச்சர் அபயக்குரல் கொடுத்தார். 'அப்பாடா! அடிமேல் அடி அடித்ததில் அம்மியும் நகரப்போகிறது!' என்று எண்ணிய நேரத்தில் அதிர்ச்சியே காத்திருந்தது!

நூலக இயக்கத்துக்கு முன்னை விடவும் மிகக் குறைவாக நிதி ஒதுக்கீடு செய்ததுமின்றி முன்பு 600 பிரதிகள் வாங்கியதற்குப் பதில் இனி 400 பிரதிகளே வாங்கப்படும் என்று அரசு உத்தரவு சொல்கிறது. நிலைமையில் அபிவிருத்திதான் இல்லை எனில் உள்ளதையும் குறைப்பதா? போதாக் குறைக்குப் பிரசுரகர்த்தர் நிர்ணயிக்கும் விலைக்கு அல்லாமல் நூலக இயக்குனர் நிர்ணயிக்கும் விலைக்கு நூல்களை சப்ளை செய்ய வேண்டும் என்று நிபந்தனை! அரசு நிர்ணயிக்கும் விலையோ காகித விலையும், அச்சுக் கூலியும் நாளுக்கு நாள் உயர்கின்ற பிரத்தியட்ச நிலையைக் கணக்கில் எடுத்துக் கொண்டிருப்பதாகத் தெரியவில்லை.

செயற்கை மழை என்று பல லட்சங்களை விரயம் செய்ய முற்படும் அரசு, கொள்ளையரைப் பிடிக்க விமானப்படையே வாங்குகிறோம் என்று அறிவிக்கும் தமிழக அரசு, உருப்படியான — உபயோகமான நூலக இயக்கத்தில் தாராள மனப்பான்மை காட்டாதது விசனத்துக்குரியது. புத்தகப் பிரியர்களுக்குப் பெரும் ஏமாற்றம் அளிப்பது. லைப்ரரிசெஸ் என்று வரி வசூலிப்பது எதற்கு?

பல எழுத்தாளர்கள் தங்கள் எழுத்துக்களில் ஒன்றேனும் நூல் வடிவம் பெற வேண்டும் என்ற ஆவலோடு தாமே பதிப்பித்து அறுநூறு பிரதிகள் நூலகங்களுக்குப் போனால் முதலீடு செய்த தொகையையாவது திரும்பப் பெறலாம் என்று காத்திருக்கும் வேளையில்,

எழுத்தாளர்களுக்கும், பதிப்பகத்தாருக்கும் ஏதோ பிச்சை போட்டு அவமானப்படுத்துவது போலிருக்கிறது தமிழக அரசின் நடவடிக்கை.

---

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

**அஞ்சலி**

# பொற்கோயிலில் உயிரிழந்த தமிழர்

வட ஆர்க்காடு மாவட்டம் செங்கம் அருகில் உள்ள சின்ன காயபட்டு கிராமமே சோகத்தில் ஆழ்ந்து கிடக்கிறது. ஒவ்வொரு குடும்பமும் தன்வீட்டில் ஒருவர் இறந்து போய்விட்டதாக நினைத்து துக்கத்தில் மூழ்கிக் கிடக்கிறார்கள். இருபது நாட்களுக்கு முன்பு ஊருக்கு வந்து போன லான்ஸ் ஹவில்தார் குப்புசாமி தற்போது உயிரோடு இல்லை என்ற செய்தியை அவர்களால் ஜீரணிக்கவே முடியவில்லை.

எட்டாம் தேதி இரவு குப்புசாமியின் மனைவி காசியம்மாளுக்கு வெலிங்டனில் உள்ள ராணுவ அலுவலகத்திலிருந்து தந்தி வருகிறது: ''ஆறாம் தேதி இரவு 1.25-க்கு அமிர்தசரஸில் உள்ள பொற்கோயிலில் தீவிரவாதிகளுடன் நடந்த மோதலில் உங்கள் கணவர் கொல்லப்பட்டார்.''

''இன்னும் மூன்றே மாதம் தாண்டி, ஓய்வு பெற்று வந்து விடுவேன்'' என்று இருபது நாட்களுக்கு முன் சொல்லிவிட்டுப் போனவரின் முகத்தை இனி பார்க்க முடியாது! இறந்த உடலை பொற்கோயில் அருகிலேயே, சகல மரியாதைகளோடு எரியூட்டி விட்டார்கள்.

22 வருடம் ராணுவத்தில் இருந்து ஓய்வு பெறும் சமயம்தானா குப்புசாமிக்கு இந்த நிலை வர வேண்டும்? காசியம்மாள் செய்தி அறிந்ததிலிருந்து ஐந்து நாட்களாய்ப் பச்சைத் தண்ணீர் கூட குடிக்காமல் படுத்த படுக்கையாக இருக்கிறார். கணவர் நினைவு அவரை அடிக்கடி கலங்க வைத்து, பழைய விஷயங்களை அசை போட வைக்கிறது.

''வெலிங்டனில் மூன்று வருடம் அவருடன் குடும்பம் நடத்தியது மறக்க முடியாதது. அந்தச் சமயத்தில் விடுமுறையில் எங்களை எல்லாக் கோயில்களுக்கும் அழைத்துக் கொண்டு சென்றார். அப்போதுதான் முதல் முறையாக ஒன்றாகப் படம் எடுத்துக் கொண்டோம். ''உன் முகம் தான் கல்யாணப் பெண் போல் நன்றாக இருக்கிறது என்று நண்பர்கள் சொல்கிறார்கள்'



பொற்கோயில் வளாகத்தில் நாட்டின் ஒருமைப்பாட்டுக்காக உயிர்தியாகம் செய்த ராணுவ வீரர் எம். குப்புசாமி

என்று என்னிடம் சொல்லிக் கலாட்டா செய்வார்'' — நினைவுகளைச் சொல்லிச் சொல்லி உருகுகிறார் காசியம்மாள்.

குப்புசாமிக்கு நான்கு பெண்கள்; ஒரே மகன். முருகன் உள்ளூரிலேயே ஏழாவது படிக்கிறான். மூத்த மகள் சரோஜாவைத் தன் மச்சானுக்கே கட்டிக் கொடுத்து இருக்கிறார். இன்னும் கல்யாணமாக மூன்று பெண்கள் இருக்கிறார்கள்.

''நான் இனிமே எதுக்கு வாழணும்?'' என்று புலம்புகிறார் காசியம்மாள்.

''உன் புள்ளைங்களை ஒழுங்கா வளர்த்துக் கல்யாணம் செய்து கொடுத்தால்தான் கணவரின் ஆத்மா சாந்தியடையும். அதற்காகவே நீ வாழணும்'' என்று அருகிலிருப்பவர்கள் ஆறுதல் கூறுகிறார்கள்.

''ரிடையர் ஆயிட்டு வந்துடறேண்டி. அப்புறம் நம்ம பையனை ஒழுங்கா வளர்த்துப் பெரிய ஆளாக்குவதுதான் என் வேலை'' என்பாராம் குப்புசாமி.

குப்புசாமி ராணுவத்தில் சென்னை ரெஜிமெண்டின் நான்காவது பிரிவான காலாட்படையைச் சேர்ந்தவர். டேராடூன், ஆக்ரா போன்ற இடங்களில் பணிபுரிந்தார். கடைசியாக அவர் பணிபுரிந்த இடம் ராஜஸ்தான். அங்கிருந்துதான் அவர் அமிர்தசரஸுக்கு அனுப்பப்பட்டார். மனைவிக்கு உடம்பு சரியில்லை என்று லெட்டர் வந்ததும் ராஜஸ்தானிலிருந்து கிளம்பி வந்து பதினைந்து நாட்கள் கிராமத்திலேயே தங்கியிருந்தார். இறந்து போன குப்புசாமியின் சகலபாடியான குப்புசாமி (அவர் பெயரும் அதுதான்) சொல்கிறார்: ''சமீபத்தில் ஊருக்கு வந்தபோது ஆறு மூட்டை நெல்லை மிஷினில் கொடுத்து அரிசியாக்கி வீட்டில் போட்டார். விறகு இல்லை என்றதும் பத்து மைல் தள்ளி உள்ள எங்கள் ஊரில் இருந்து விறகுக் கட்டைக் கட்டி எடுத்து வந்தார். லீவில் வந்தாலும் இதுபோல் வீட்டிற்கு ஏதாவது காரியம் செய்து கொண்டே இருப்பார்.



மனைவி காசியம்மாள்



மகன் முருகன்



மறைந்தவரின் சகபாடி
கே. குப்புசாமி

பெரிய பொண்ணு சரோஜா மேலே ரொம்ப இஷ்டமாக இருப்பார்.''

''நாட்டின் ஒற்றுமைக்காக அவர் செய்த தியாகம்னு தாம்மா எடுத்துக்கணும்'' என்கிறார்கள் கற்றியுள்ள பெண்மணிகள்.

வெலிங்டனில் ஆபீஸர் பயிற்சி பெறுவோருக்கு உடற்பயிற்சி கொடுக்கும் ஆசிரியராக இருந்தாராம் குப்புசாமி.

''எவ்வளவு பெரிய ஆபீஸரா இருந்தா என்னடி? என்னிடம் பயிற்சி பெற்றுத்தான் போக வேண்டும்'' என்று சொல்வாராம் அடிக்கடி.

43 வயதில் 22 வருடங்களை ராணுவத்தில் கழித்திருக்கிறார். யூனிபாரம் கொஞ்சம கூட மடிப்புக் கலையாமல் இருக்க வேண்டுமாம். கொஞ்சம் கசங்கி இருந்தால் கூடப் போட மாட்டாராம்.

''சண்டைப் படங்களும், பக்திப் படங்களும் அவருக்கு பிடித்தமானவை — அதிலும் சண்டைப் படம்னு ரொம்ப ஆவல்'' என்கிறார் காசியம்மாள்.

''சம்பளத்தை அப்படியே கொண்டு வந்து என்னிடம் கொடுத்து விடுவார். ''இவ்வளவுதான் சம்பளமா?'' என்றால், ''இவ்வளவுதான் கொடுத்தாங்கடி'' என்று சொல்லிச் சொல்லிச் சிரிப்பார்.'' நினைவு அலைகள் மோத, மோத, விஷயங்களைச் சொல்லி வருந்தி அழுகிறார் காசியம்மாள்.

வேதனை மிகுந்த அந்தச் சூழ்நிலையிலிருந்து நம்மைக் கஷ்டப்பட்டு விடுவித்துக் கொண்டு புனிதப் பொற்கோயிலில் நாட்டுக்காக உயிரைத் துறந்த ராணுவ வீரர்களின் ஆன்மாக்கள் சாந்தியடையப் பிரார்த்தனை செய்தவாறே சென்னை செல்லும் பஸ்ஸைப் பிடிக்க நடக்கிறோம்.

—நிருபர்
படங்கள்: சுபா

## உலகை விலைக்கு வாங்கலாம்!

''உலக வடிவங்களில் பல வகை உண்டு. இந்தியாவில் அட்டையாலும், மரத்தாலும் தயாரிக்கிறார்கள். தயாரிப்பவர் எண்ணிக்கை மிகக்குறைவு. புதுதில்லியிலும், கல்கத்தாவிலும் தான் சிலர் இருக்கிறார்கள்'' என்கிறார் இவற்றைச் சென்னையில் அதிக அளவில் விற்பனை செய்யும் இந்தியா ஹாப்பி ஸெண்டர் நிர்வாகி திரு. ஜவஹர்.



''மேல்நாடுகளில் தகரம், இரும்பு, பிளாஸ்டிக், கண்ணாடி போன்றவற்றால் மட்டுமின்றி ஊதி உருண்டை வடிவம் பெறக் கூடிய மெல்லிய ரப்பர் பலூன்களாகவும் குழந்தைகளுக்குத் தயாரித்தளிக்கிறார்கள். உள்ளே விளக்குகள் பொருத்தப்பட்ட உலக வடிவங்களும் உண்டு!

''சினிமாவில் உலக வடிவங்கள் அதிகமாக இடம் பெறும். குறிப்பாக ஹிந்தி சினிமாவில். ஏனென்று மட்டும் கேட்காதீர்கள்!

''ரொம்ப விலை உயர்ந்த உலக வடிவம் கண்ணாடியாலானது. விலை ரூ. 2,200-.''

மேலட்டையை அலங்கரிக்கும் திருமதி **ஷோபனா ரமேஷ்** பரதநாட்டியக் கலைஞர் என்ற முறையில் உலகின் பல பாகங்களுக்கும் சென்று வந்திருப்பதால் தாம் விஜயம் செய்த நாடுகளை உலகை உருட்டிப் பார்த்து நினைவு கூர்ந்து மகிழ்கிறார்.

பேட்டி: **சிக்கி**
வண்ணப்படம்: **உத்ரா**

# கோடிக்கரை குழகர்



○ கோடிக்கரைக் குழகர் ஆறு கரங்களுடன் கூடிய முருகன்

"பொன்னியின் செல்வன்" படித்தவர்களுக்குக் கோடிக்கரை புதிதாக இருக்க முடியாது. அருள்மொழி வர்மருடனும், வந்தியத் தேவனுடனும், பூங்குழலியுடனும் தொடர்புடைய கோடிக்கரையை மறக்க முடியுமா என்ன?

பொன்னியின் செல்வன் எழுதுவதற்காகவே கோடிக்கரை சென்று வந்த அமரர் கல்கி அதுபற்றிக் கட்டுரையும் வடித்திருக்கிறார். அங்கே அவர் கண்ட குழகர் கோவில் பற்றியும், உலகத்திலேயே முதன்மையான கடற்கரை என்று அவர் கருதிய கடற்கரையைப் பற்றியும் எழுதியிருப்பதைப் படித்த நாளிலிருந்து கோடிக்கரைக்குப் போய் வரவேண்டுமென்ற ஆவல் இதய அந்தரங்கத்தில் குடி கொண்டிருந்தது.

வேதாரண்யம் அகத்தியான் பள்ளியைத் தரிசனம் செய்து கொண்டு அங்கிருந்து கோடிக்கரை செல்ல வேண்டும். திருத்துறைப் பூண்டி ரயில் நிலையத்திலிருந்து பஸ் வசதி இருக்கிறது. தவிர கோடிக்கரை வரை ரயிலிலும் போகலாமாம்.

"அந்தச் சாலையில் போகும்போது முதலில் சிறிது தூரம் உப்பளங்கள் இருக்கின்றன. பிறகு இடப்பக்கத்தில் குட்டையான காடு தோன்றுகிறது. வலப்புறத்தில் நெடுந்தூரத்துக்குச் சதுப்பு நிலம் காணப்படுகிறது...

"சாலையின் இடப்புறத்தில் உள்ள காட்டில் ஓரிடத்தில் ஒரு மேடு இருக்கிறது. அங்கே ஜீப் வண்டியை நிறுத்திவிட்டு மேட்டில் ஏறினோம். மேட்டின் உச்சியில் இரண்டு பாதச் சுவடுகள் இருக்கின்றன. அதன் மேல் ஒரு மண்டபமும் இருக்கிறது. அந்தப் பாதச்சுவடுகள் ஸ்ரீ ராமபிரானுடையவை என்று சொன்னார்கள்."

அடாடா! இன்றும் அமரர் கல்கி எழுதியது போலவே இருக்கிறதே! ஒரே ஒரு மாறுதல். அவர் வந்தபோது இங்கே மேட்டூர் கெமிகல் அண்ட் இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் அமைத்துள்ள ராக்ஷஸ மோட்டார் பம்புகளும், தண்ணீர்க்குழாய்களும் இருந்திருக்காது.

சதுப்பு நிலங்களெல்லாம் உப்பளங்களாகக் காட்சியளிக்கின்றன. எங்கும் உப்புக் குவியல்கள். ஓலை போட்டு மூடிய உப்பு மலைகள்.

. இதோ குழகர் கோவில். குழகர் என்றால் அழகர் என்றே பொருள்படும். முருகப் பெருமானும், சிவபெருமானும் குழகர் என்று அழைக்கப்படுகிறார்கள்.

"கோடிக்கரைக் குழகரே! கடுமையான சமுத்திரக் காற்று வீசுகின்ற இந்த இடத்தில் யார் துணையோடு வசிக்கிறீர்? தன்னந்தனியாக நீங்கள் இங்கே இருப்பதைக் காணும்படி ஆயிற்றே! வேறு எங்காவது குடியிருக்கக் கூடாதா?" என்று மிகுந்த ஆற்றாமையோடு பாடுகிறார் சுந்தரர்:

கடிதாய்க்கடற்காற்றுவந்
  தெற்றக் கரைமேல்
குடிதான்அய லேஇருந்
  தாற்குற்ற மாமோ
கொடியேன் கண்கள்
  கண்டன கோடிக் குழகீர்
அடிகேள் உமக் கார்
  துணையாஇருக் கிறீரே!



○ குழகர் என்ற [illegible]

கடைசி அடியில் ஈசன் தனித்திருப்பதைக் குறித்து சுந்தரருடைய மனம் கலங்குவதையும் இரங்குவதையும் அப்படியே உணர்கிறோம்.

குழகர் கோவில் இன்னும் ஜன நடமாட்டமில்லாத இடத்தில் தான் இருக்கிறது. ஆனால் அத்தனை பயங்கரமாகத்தோன்றவில்லை. நித்திய பூஜைகளும் நடக்கின்றன. திருவெங்கடராஜ குருக்கள் ஒருகுறைவுமில்லாமல் குழகரைப் பார்த்துக் கொள்கிறார். கோவிலுக்குள் நுழையும் போது முஸ்லிம் அன்பர்களுக்கும் இந்தக் கோவிலில் ஈடுபாடு உண்டு

என்று அறிந்து வியக்கிறோம். அங்கே உள்ள தண்டு விளக்கை உபயமாக அளித்தவர் ஸையது முகம்மது என்ற அன்பர்.

காலை பூஜை முடிந்து விட்டது. நிசப்தம் குடி கொண்டிருக்கிறது. காற்றின் ஓசைதான் கேட்கிறது. தல புராணத்தை எடுத்துக் கூறுகிறார் குருக்கள்.

காற்றுத் தேவன் அமுதத்தைத் தேவலோகத்துக்கு எடுத்துச் சென்ற போது அமுத கலசம் ஆடி அமுதம் சிந்தியது. சிந்திய அமுதமே சிவலிங்கமாயிற்று. ஈசன் பெயர் அமிர்தகடேச்வரர். அம்பிகை 'மையார் தடங்கண்ணி. இவ்வாறு சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாமகரணம் செய்தாரோ அல்லது அஞ்சனாக்ஷி என்ற வடமொழிப் பெயர்தான் இயற்பெயரோ தெரியவில்லை.

விநாயகரும் அமிர்த விநாயகர். முருகனும் அமிர்த கர சுப்ரமண்யர். அவர் வீற்றிருக்கும் மயில் தேவ மயில். வடக்கு நோக்கி இருக்கிறது. அழகருக்குப் பிறந்த பிள்ளையும் குழகர்தானே! அழகான தோற்றத்தோடு அபூர்வமானவராகவும் விளங்குகிறார். ஒரே முகமும் ஆறு கரங்களும் உடையவராக ஒரு கரத்தில் அபய முத்திரையும் மற்றொரு கரத்தில் அமுதமுமாகத் தரிசனம் தருகிறார். அமுதத்தையே அருளும் பெருமானைக் காணும் போது ''வேறு என்ன வேண்டும் நமக்கு?'' என்று தோன்றுகிறது.

## ஆலயந்தி

''மும்மூர்த்திகளும் இங்கே முருகனை வழிபட்டதாக ஐதிகம்'' என்று கூறினார் குருக்கள்.

நர்மதை நதிக்கரையில் சுவேத முனிவருக்குப் பிறந்தவர் குழகர் என்ற முனிவர். அவர் இங்கே வந்து ஈசனைப் பூஜித்ததால் குழகேசர் என்று பெயர் வந்தது என்பதும் ஒரு வரலாறு. நவகோடி சித்தர்கள் வழிபட்ட தலம் என்றும் கூறுகிறார்கள்.

பற்பல கல்வெட்டுக்களை இந்தச் சிறு கோவிலில் காண்கிறோம். திரிபுவனச் சக்கரவர்த்தி ராஜராஜ தேவர் ஆட்சியாண்டு பதினான்கில் திருவிளக்கெரிக்க நிலம் அளிக்கப்பட்ட செய்தியும், ஜடாவர்மன் பராக்ரம பாண்டியன் ஒரு விளக்கிடப் பொன் கொடுத்த செய்தியும் கல்வெட்டுக்களால் தெரியவருகின்றன. அதனால் சோழ அரசர்கள் மட்டுமின்றி பாண்டிய அரசர்களும் கோடிக்கரைக் குழகரிடம் ஈடுபாடுள்ளவர்களாக இருந்தார்கள் என்றாகிறது. செப்புப் பட்டயம் வேறு இருக்கிறதாம்.

சுவாமி தரிசனம் செய்துவிட்டு மையார் தடங்கண்ணியின் சந்நிதிக்கு வருகிறோம். தெற்குப் பார்த்த சந்நிதி. அடுத்ததாகக் காடு கிழாள் என்ற பொருத்தமான பெயருடைய வன துர்க்கை சந்நிதி. துர்க்கை தாமரைப் பூ நிறத்தில் சேலை அணிந்து கம்பீரமாகக் காட்சி தருகிறாள்.

உற்சவ மூர்த்திகளைப் பார்க்கும்போது உற்சாகமே உண்டாகி விடுகிறது. திரிசூலம் தாங்கிய கோலத்தில் அம்மன் அழகருக்கேற்ற அழகியாகத் திகழ்கிறாள். பல நாட்களாக உள்ளே வைத்துப் பூட்டப்பெற்றுத் தூசு படிந்திருந்தும் விக்கிரகங்களின் அழகை மறைக்க முடியவில்லை.

சுவாமி சந்நிதியில் குழக முனிவருடைய சிலை இருக்கிறது.

டாலமி என்ற கிரேக்க அறிஞர் கோடிக்கரையைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறாராம். ஆதலால் தொன்மையான ஊர் என்பதோடு தமிழக வரலாற்றில் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த இடமாக விளங்கி வந்திருக்கிறது கோடிக்கரை.

குழகர் கோவிலிலிருந்து சித்தர் கட்டம் என்ற இடத்துக்குச் சென்றால் அங்கே ஒரு ஓலைக் கூரையால் வேய்ந்த கோவிலில் பார்வதி பரமேசுவரர் குடி கொண்டிருப்பதைக் காணலாம். இந்த இடத்தைச் சித்தர் ஓடை என்றும் சித்தாச்ரமம் என்றும் குறிப்பிடுகிறார்கள். ஜீவன் முக்தர்களான சித்தர்கள் இன்றும் இங்கே வாழ்ந்து கொண்டிருப்பதாக நம்புகிறார்கள். இப்படிப்பட்ட புனிதம் நிறைந்த இடத்துக்கு வருவது அவ்வளவு சுலபமில்லை. அலை வீசும் கடல். கண்ணுக்கெட்டிய தூரம் மணல் பரப்பு. ஆங்காங்கே புதர்கள். கடல் பொங்கும் நாட்களில் வெள்



○ அழகிய கூத்தர்



○ கோடிக்கரை - பழைய லைட் ஹவுஸ்

எக்காடாக இருக்குமாம். வெண்மணல் பரப்பிலும், நீர்ப் பரப்பிலும் இறங்கி, ஏறி ஜீப் சென்ற போது ''கல்கி'' வர்ணித்த புதை சேற்றுக் குழிகளைப் பற்றிய ஞாபகம் வந்து திகிலாக இருந்தது. ஆனால் என்ன ஏமாற்றம்! ஓட்டுனரின் திறமை காரணமாக ஒரு தடவை கூட அந்தமாதிரி சேற்றுக் குழியில் ஜீப் சிக்கவில்லை.

சித்தர் கட்டத்துக்கோவிலில் ஒரு மராட்டியமொழிக் கல்வெட்டு இருக்கிறது. தஞ்சையை ஆண்ட துளஜா மகாராஜாவின் கல்வெட்டு என்பதாகத் தமிழ்நாடு அரசு தொல்பொருள்ஆய்வு துறை வெளியிட்டுள்ள புத்தகத்தில் பார்த்துத் தெரிந்து கொண்டேன்.

குழகர் கோவிலுக்குக் கிழக்கே உள்ள சமுத்திரம் ருத்ரகோடித் தீர்த்தம் என்று புகழ் பெற்றிருக்கிறது. சிவப்பு நிற நண்டுகள் மிரண்டு இங்குமங்கும் ஓடின. எங்களை அழைத்துச் சென்ற திரு. பாலசுப்பிரமணியம், ''இங்கே மாசி மகம், ஆடி தை அமாவாசைகள் ரொம்ப விசேஷம்; ஆயிரக்கணக்கான மக்கள் வந்து கடலில் நீராடுவார்கள்'' என்று விளக்கினார். 22 ஆண்டுகளுக்கு ஒருமுறை அர்த்தோதயம் என்ற புண்ணிய காலத்தில் விழா நடைபெறுமாம். அப்போது ருத்ரகோடியில் நீராடுவது ரொம்ப விசேஷமாம். இவ்வளவு சொன்ன பிறகும் அங்கே இறங்கி நீராடத் தைரியம்வரவில்லை. அலைகள் பாதங்களைவருடுகிற இடத்தில் நின்றுகொண்டு கையால் நீரைத் தலையில் தெளித்துக் கொண்ட திருப்தியுடன் ஜீப்பில் ஏறினோம்.

அங்கிருந்து சில கிலோமீட்டர் தொலைவில் கலங்கரை விளக்கங்கள். ஒன்று இடிந்து போன பழைய லைட்ஹௌஸ். இன்னொன்று புதிதாகக் கட்டப்பட்டுப் பளபளவென்றிருக்கிறது. 'இதில் ஏறினால் கடற்கரை நேர் கோணமாகத் திரும்பி மேற்காகப்போவது தெரியும்' என்று கூறினார்கள். 'நீங்கள் சொல்வதை நம்புகிறோம், கல்கியும் எழுதியிருக்கிறார்' என்று சொல்லி விட்டுக் கிளம்பினோம்.

திரும்பும் போது கல்கியவர்களுக்கு ஏற்பட்ட அனுபவம் எங்களுக்கும் ஏற்பட்டது. இப்போது சரணாலயமாக அறிவிக்கப்பட்டிருக்கும் காடு வழியாக ஜீப் வண்டி சென்றது. காடு என்றால் குட்டையான சதுப்பு நிலக் காடுகள்தான். மரங்கள் இல்லாத மைதானங்களில் மான்கள் தென்பட்டன. வண்டியின் சத்தத்தைக் கேட்டு மிரண்டு ஓடத்தொடங்கின.

''அவற்றின் முழு வேகத்தையும் பார்த்து விடுவதற்காக 'ஜீப்' டிரைவர் வண்டியை அதிவேகமாக ஓட்டினார். அடடா! மான்கள் விரைந்து ஓடுகையில் அவைகள் தாண்டிக் குதிக்கும் அழகுக்கு உலகில் வேறு எதுவும் இணையில்லை. ஓட்டப் பந்தயத்தில் மான்கள் தான் ஜயித்தன. ஜீப் வண்டியை முந்திக் கொண்டு அவைதாண்டிக் குதித்துக் காட்டில் புகுந்து விட்டன.''

கல்கியவர்களின் எழுத்து அப்படியே கண்முன்னால் விரிந்தது.

சித்தர் ஓடையிலிருந்து வரும் வழியில் பல நீர்ப் பறவைகள் மோனத்தவம் புரிவதைக் கண்டோம். உப்பளங்களுக்குத் தெற்கேயுள்ள சதுப்பு நிலப் பிரதேசத்தில் குளிர் காலத்தில் ஏராளமான பறவைகள் வருமென்றும் அதனால்அந்த இடம் பறவைகளின் சரணாலயமாக்கப்பட்டிருக்கிறதென்றும் அறிந்தோம்.

கடற்கரை நேர்கோணமாகத் திரும்பும் இடத்துக்குப் பாயிண்ட் காலிமோர் என்பது ஆங்கிலேயர் சூட்டிய பெயர். இங்கிருந்து படகில் யாழ்ப்பாணம் போவது சுலபம் என்றனர்.

கன்னியாகுமரியைப் போலவே இங்கும் கடலிலிருந்து சூரியன் உதிப்பதையும் கடலிலேயே மறைவதையும் காணலாம்.

இயற்கை எழிலில் மனம் பறிகொடுத்து அந்த அழகிலேயே ஈசனைக் காணும் சித்தர்கள் வாசம் செய்யும் தலம்.

பாரூர்மலி சூழ்மறைக்
காடதன் தென்பால்
ஏரார்பொழில் சூழ்தரு
கோடிக் குழகை
ஆரூரன் உரைத்தன
பத்திவை வல்லார்
சீரூர்சிவ லோகத்
திருப்பவர் தாமே.

திருமறைக்காட்டின் தெற்கே உள்ள கோடிக்கரை சிவலோகமேதான் என்று தோன்றுகிறது நமக்கும்.



சென்னை 'அபிராமி' திரையரங்கில் 'NEVER SAY NEVER AGAIN திரைப்படம் ஓடிக் கொண்டிருந்தது. ஜேம்ஸ் பாண்ட் வில்லனின் ஆளைச் சந்தித்து அவனுடன் சானிரேவில் சூதாடும் காட்சி. பந்தயத் தொகை மில்லியனில் ஆரம்பித்து பில்லியன் வரை உயர்ந்து கொண்டேயிருந்தது. அப்போது படத்தை நிறுத்தாமல் திடீரென்று திரையில் ஒரு ஸ்லைடு காட்டப்பட்டது! அது ஒரு பெரிய லாட்டரிச் சீட்டுக் கடையின் விளம்பரம் — அதில் லட்சத்தில் ஆரம்பித்து கோடி ரூபாய் வரை பெறலாம் என்ற அறிவிப்பு!

—சி. பூபால்சிங்.

மின்னும் மேனி மெருகுக்கு
ரெக்ஸோனா




மின்னி மிளிரும் மேனி...என்னும் உங்கள் பொன்னான கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனா.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையான ரெக்ஸோனா...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

**ரெக்ஸோனா** உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைத்திருக்கிறது.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு.

LINTAS RX 84 2014 TM

## அத்தியாயம் 9

## தும்புரு நாதம்

ஏதோ, வேங்கை மார்பனைப் பற்றிய பேச்சு, தியாகவல்லியைக் காயப்படுத்துவதாக நினைத்த திருமேனி, வேறு திசையில் தனது நாவைத் திருப்பினாள்.

அது தியாகவல்லிக்கு அறத்துன்பமாயிருந்தது. கிடைத்த சந்தர்ப்பத்தை முழுக்கவும் பயன்படுத்த முடியாதபடி செய்துவிட்ட அண்ணன் மீது ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. சபித்துக் கொள்ளவும் செய்தாள்.

இவரால் மேலும் என்னென்ன விபரீதங்கள் முளைத்து இலை விரிக்குமோ என்றும் அஞ்சினாள். அதே நேரத்தில் கானப்பேரெயிலுக்கு ஏற்படப் போகும் விபத்து குறித்தும் கவனமாக இருக்க ஆயத்தமானாள்.

இரவு உண்டு முடித்ததும் திருமேனியும் தியாகவல்லியும் படுக்கைக்குச் சென்றனர்.

மறுநாள்...

அவர்களுக்கான வீடு, வசதிகள் ஏற்பாடாயின.

அரண்மனையையொட்டி வீடு தரவில்லையே என்கிற ஆதங்கம் தியாகவல்லிக்கு. அவ்வாறு அமைந்து விட்டதில் ஆனந்தம் காளிங்கனுக்கு.




பாண்டிய இளவரசி திருமேனியின் அந்தரங்க மெய்க்காப்பாளனாகக் காளிங்கன் நேமிக்கப்பட்டு விட்டான் என்கிற பிரகடனம் வேங்கைவனத்துச் செவிகளில் இரகசியமாய் மோதியது.

ஆ! காளிங்கன் மூலாதாரத்திலேயே சென்று அமர்ந்து விட்டான் என்று மகிழ்ந்து கொண்டான் கானப்பேர் வேந்தன் வேங்கை மார்பன். அது அவனது ஜீவாதாரத்தையே பதிக்க என்பதை அப்போதைக்கு அவனறிய நியாயமில்லை.

தியாகவல்லி மட்டும் வாரம் இருமுறை அல்லது மும்முறை அரண்மனைக்குச் சென்று திரும்புவாள். தினமும் திருமேனியைச் சந்திக்க ஆசைதான். என்ன செய்வது? என்ன பேச இருக்கிறது? அண்ணனால் என்ன திசை திருப்பம் நிகழுமோ என்கிற அச்சப் பேயு மனத்தைக் குடைந்து கொண்டிருக்கிறதே!

நேற்று நடந்த விவாதம்...

காரசாரமான விவாதம்தான்...

அந்த விவாதத்துக்கிடையே...

''இந்த வார்ப்படத்தையே காட்டிக் கொடுத்துச் சிலை செய்யப் போகிற உண்மையை மாமன்னரிடம் எடுத்துக் கூறி வம்புக்கு இழுத்துப் போர்முரசம் கொட்டச் செய்யப் போகிறேன்!'' என்றான் காளிங்கன்.

தியாகவல்லிக்கோ, கோபமோ கோபம்...

அவள் வெடித்த எரிமலைச் சொற்கள்:

''அவ்வாறானால் தியாகவல்லி உங்கள் அருமைத் தங்கையாக இருக்க மாட்டாள்; அசல் விரோதியாக மாறி விடுவாள்.''

கூண்டுப்புலியாய் அடங்கிப் போனான் காளிங்கன்.

**வா**ர்ப்படத்துக்கான மெழுகுச் சிலை உருவாகிறது...

தனது அன்பின் காரணமாகத் தியாகவல்லி அழைக்கிற இடத்துக்குத் திருமேனி வருகை தந்தாள்... கோயில், உய்யானம், மலையடிவாரம்...

அங்கே சிற்பி சொன்னது போல வந்திருந்து, இளவரசியின் உருவத்தை மனத்துள் ஆவாகனம் செய்து கொள்வான்.

மனத்திலிருந்த உருவத்தை மெழுகுச்சிலையில் வடிப்பான். நல்ல பதத்துடன் திரட்டிய தேன் மெழுகு அவனது கற்பனைக்கெல்லாம் வளைந்து கொடுக்கும்.

உருவம் பூர்த்தியானதைக் கேள்விப்பட்டு அன்றிரவு ரகசியமாகத் தியாகவல்லியையும் காளிங்கனையும் அழைத்தான் ஒற்றன் பசுபதி.

மேற்கே நாகம்போல் நீண்டு நெளிந்திருந்த மலையடிவாரத்துக்குச்செல்லவேண்டும். உள்ளூற பயமும் இருந்தது. ஏன் செல்ல வேண்டும்? வார்ப்படம் செய்து அனுப்பி விடுமாறு உத்தரவு பணிக்கலாம் என்றாலோ, சிலை நன்றாக இல்லாமல் போனால், வாங்கிக் கட்டிக் கொள்ளவேண்டியவள் தியாகவல்லிதானே!

'நீ ஏன் முகவில் முழுமையாகப் பார்த்து வார்ப்படம் உருவாக்க உத்தரவிடவில்லை?' என்று வேங்கைமார்பன் எரிச்சலுறத் தொடங்கி விட்டால்...?

ஆகவே போயே தீர வேண்டிய நிர்ப்பந்தத்துக்குரியவளானாள்...

''தியாகவல்லி! நீ மட்டும் போகலாமே! இருவரும் செல்வதால் ஏதேனும் வம்பு வந்தால்? நான் இருந்தால் இங்கு சமாளித்து விடுவேன்!'' என்றான் காளிங்கன்.

தியாகவல்லி தயங்கினாள்.



''வேண்டாம். உங்களை விட்டுச் செல்ல எனக்குப் பயமாக இருக்கிறது.''

''அப்படி என்றால் நீ இங்கேயே இரு! நான் போய்க் கவனித்து விட்டு வருகிறேன்.''

''அதுவும் வேண்டாம்.''

''இருவருமே அகப்பட்டுக் கொள்ளலாம் என்கிறாயா?''

''அகப்பட்டுக் கொள்வோம் என்று நீங்கள் நினைப்பதே தவறல்லவா? அப்படியே அகப்பட்டுக் கொண்டால் என்னால் நிலைமையைத் தேற்ற முடியும்! புறப்படுங்கள்!''

''நான் வரவில்லை?''

''ஏன்?''

''நான் இப்போது இளவரசியின் அந்தரங்க மெய்க்காப்பாளன். அந்தப் பதவிக்குத் துரோகம் செய்வது போலிருக்கிறது! நிச்சயமாக என்னால் வர முடியாது.''

''துரோகத்தைப் பற்றி நீங்கள் பேசுகிறீர்களா? பரவாயில்லை. வரவேண்டாம். நானே சென்று திரும்புகிறேன். ஏதேனும் இசகு பிசகாக ஏற்பட்டுவிட்டால்...?''

''இதில்தான் நீ என்னை நம்பப் போகிறாய்! புறப்படு!''

மனம் என்னமோ பிழியத்தான் செய்தது. அவள் பசுபதியுடன் புறப்பட்டாள்.

ரதம் புறப்பட்டது. அது அவர்கள் கொண்டு வந்த ரதம்.

''பசுபதி! ரதத்தைக் கூடுமான வரையில் மெல்லச் செலுத்து. சத்தம் கூடாது.''

ரதம் எங்கெங்கோ குறுக்குப் பாதைகளில் வளைந்து மலையடிவாரத்தை நெருங்கிக் கொண்டிருந்தது.

வழியோர நரிகளின் கூட்டம்.

மரங்களில் கோட்டான்களின் கூச்சல்.

தியாகவல்லியின் குடல் இலேசாக நடுங்கியது. வேங்கைமார்பனுக்காக அவள் செய்கிற தியாகம் போல அது இருந்தது.

இளவேனில் காற்று இதமாக வீசிக் கொண்டிருந்தது.

வானில் வளர்பிறை நிலவு அவளது தியாக நெஞ்சைக் கண்டு வாழ்த்துக் கூறி ஒளி சிந்துகிறது.

பின்னால் ஏதோ சத்தம் வருவது போன்ற பிரமை...

அடிக்கடி திரும்பிப் பார்த்துக் கொண்டிருந்தாள்...

ரதத்தின் சப்தம் அவ்வாறு எதிரொலிக்கிறது என்பது அவளுக்குப் புரிபடவில்லை.

ரதம் மலையடிவாரத்தை நெருங்கி நிற்கிறது.

நான்கு கனத்த தீப்பந்தங்கள் போதுமான பிரகாசமுடன் எரிந்து கொண்டிருக்கின்றன.

தியாகவல்லியைக் கண்ட சிற்பி, வணங்கி வரவேற்கிறார். துணைச் சிற்பிகள் தொலைவில் நிற்கின்றனர்.

நடுவே...

தேன்மெழுகுமேனியில் தேனமுதுத் திருமேனியாள், மென்மை கண்ட உருவத்துடன் தரையில் படுத்திருக்கிறாள்.

தியாகவல்லியின் மனம் துடிக்கிறது... சிநேகிதியாகப் பழகி விட்டாளே....? இருந்தாலும் சிலா ரூபம்தானே?

"திருப்தியா இளவரசியாரே?" என்றார் சிற்பி.

"இளவரசியா?"

"வேங்கைவனத்து இளவரசி தானே நீங்கள்?"

தியாகவல்லி முறுவலித்துக் கொண்டே தலையசைக்கிறாள்: "பரமதிருப்தி சிற்பியாரே! அசல் திருமேனி! நானே கூட எனது சிநேகிதி தரையில் படுத்துக் கொண்டிருக்கிறாளே என்று முதலில் வருத்தப்பட்டேன். அப்படி ஒரு தத்ரூபம்! எப்போது வார்ப்படம் முடியும்?"

ஒரு வாரத்தில். இந்த மெழுகுச் சிலை மீது பண்சகதை பூசியும் அப்பியும் ஒரு தூண் உருளைக்குச் செய்ய வேண்டும். பொன்னை உருக்கி ஊற்றுகிற போது, கனமாகப் பாயாமல் அச்சமாகப் பாய ஆவன செய்ய வேண்டும். துவாரங்களையுண்டு பண்ணவேண்டும். நிழலில் காய வேண்டும். பின் சூளையிட்டு உள்ளிருக்கும் மெழுகு உருகி வெளி வர வேண்டும். அதன் பிறகுதான் எடுத்துச் செல்ல வேண்டும்!"

"இந்த உருவம் அப்படியே உருகி வெளியில் வந்து விடுமா?"

"ஆமாம்; அப்போது தான் அந்த இடத்தில் பொன் அச்சமாகப் பாய்ந்து நிரப்பும்."

அவளது கண்கள் கலங்கி விடடன. உருவம் தீயில் உருகிக் கரையுமாமே! அந்த அளவுக்குப் பழகிவிட்டாள்.

"சிற்பியாரே! நீங்களும்தானே செல்கிறீர்கள்?"

"நானும் எனது சீடர்களும் சென்று, உருக்கி வார்த்தெடுத்த சிலையை எடுத்து, பின் பிசிறு செதுக்கி, மெருகேற்றி ஒப்படைக்க வேண்டும்."

"பலே! நல்லசன்மானம் வழங்கச் சொல்லுகிறேன். காலம் முழுவதும் உட்கார்ந்தே சாப்பிடுகிற அளவுக்கு வழங்கச் சொல்லுகிறேன். நான் புறப்படலாம் அல்லவா?"

உள்ளூற உதைப்பு. எந்த நேரத்திலும் அண்ணன் என்ன செய்து விடுவாரோ?

தன்னுடன் வந்த ஐந்து ஒற்றர்களும் அங்குதான் இருந்தார்கள். ஒருவனைச் சமிக்ஞை மூலம் அருகில் அழைத்துத் தனித்து நடந்தாள்.

கொஞ்ச தூரம் சென்றதும், அவனிடம் மெல்லச் சொன்னாள்: "கவனமாகச் செய்து முடியுங்கள். வார்ப்படம் காண்ப்பேரயில் நோக்கிச் செல்கிற போது உன்னுடன் ஒருவனை மட்டும் அழைத்துச் செல்! ஏனைய மூவர் எனது வீட்டைச் சுற்றி வட்டமிட்டுக் கொண்டிருக்க வேண்டும். வார்ப்படம் அங்கே சேர்ந்த விவரத்தை ஒருவன் விரைந்து வந்து என்னிடம் சொல்லவேண்டும். மற்றவன் சிலை உருவானதும் அதன் விவரத்தை வந்து சொல்ல வேண்டும்" என்று கூறியவள், சற்றே நிதானித்து, எல்லாமே நன்மையில் முடியும் என்றளவில் மட்டுமே சில நடந்த செய்திகளைச் சொன்னாள். ஏதாவது வேந்தர் செய்தி சொன்னால் ரகசியமாக வந்து சொல்ல வேண்டும் என்றும் எச்சரித்தாள்.

அவனும் பணிந்து ஏற்கிறான்.

சிற்பியை நாடி வந்த தியாகவல்லி, உத்தரவு பெற்றுப் புறப்பட ஆயத்தமானாள்.

"இளவரசி! எப்படியோ இந்த இரவில் வந்து விட்டீர்கள். இதே இரவை மீண்டும் விழிக்கச் செய்து புறப்படுவானேன்? அதோ இருக்கும் குடில், கூரை வேய்ந்ததானாலும் வசதி மிக்கது. தங்கியிருந்து காலையில் புறப்படுவது நல்லது என்று நினைக்கிறேன்."

சிற்பியார் என்னமோ நல்ல மனத்துடன் தான் இவ்வாறு சொன்னார். பகபதியும் அதுவே உசிதமென்று ஆதரித்தான்.

ஆனால் தியாகவல்லி?

அண்ணனை எண்ணி அலமருகிறாள்...

* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

அமெரிக்காவின் விண்வெளி விஞ்ஞான நிறுவனமான 'நாசா (Nasa)' இரவில் பூமியைப் பிரகாசமாக்கும் புதிய சோதனையில் இப்போது ஈடுபட்டுள்ளது. 16 சூரிய சக்தி கண்ணாடிகளை பூமியிலிருந்து வானில் 300 மைல் தூரத்தில் நிற்கச் செய்து அவற்றின் மூலம் குறிப்பிட்ட பிரதேசங்களை இரவிலும் ஒளி மயமாக்கத் திட்டமிட்டு வருகிறது.

இவற்றின் ஒளி, 56 சந்திரன்களின் மொத்த ஒளியைக் கொண்டிருக்கும். 200 மைல்கள் முதல் 300 மைல்கள் வரை பிரகாசத்தை அளிக்க முடியும். பெருமளவுக்கு மின்சார செலவைக் குறைக்கவே இத்திட்டம். முதலில் அமெரிக்காவின் பாஸ்டன் மற்றும் ஹானலூலு நகர்களின் மீது சோதித்து பார்க்கப்படும். பூமியில் இரவுக்கும், பகலுக்கும் வித்தியாசம் தெரியாமல் போனால் மிருகங்களும், பறவைகளும் எப்படி நடந்து கொள்ளப் போகின்றன என்பது கவனிக்க வேண்டிய விஷயம்.

ஆதாரம்: டைம்.
தகவல்: ராஜேஸ்வரி



ஏதேனும் நிகழுமானால் தனது உயிர் போவது குறித்து அவள் கவலைப்படவில்லை. வார்ப்படம் ஒழுங்காக — பின்னமின்றி வேங்கைவனம் நோக்கிச் செல்ல வேண்டுமே என்று பிரார்த்தனை செய்தாள். இந்தச் சிலையில் அல்லவோ வேங்கைமார்பனுடைய ஜீவனே இருக்கிறது...!

அன்னையின் ஏதும் அவத்தரை செய்துவிடக் கூடாதே!

''என்ன இளவரசி யோசிக்கிறீர்கள்?''— என்றார் சிற்பி.

''ஒன்றுமில்லை; தங்கியிருந்து கருக்கலில் புறப்படுகிறேன்!''

தியாகவல்லி தங்குவதற்கான ஆயத்தங்கள் உடனடியாக நடைபெற்றன.

உள்ளே சயிறு கட்டிலானாலும் படுக்கச் சுகமாகவே இருந்தது.

குடிலின் படலை மூடிக் கொண்டு படுத்துக் கொண்டாள்.

வெளியில் உடன்வந்த துணைவர்கள் விழிமேல் இமை மூடாது வேல் தாங்கிக் காவல் புரிந்தனர்.

சிற்பியும், துணைவர்களும் மெழுகுச்சிலைக்கு மண்ணை பூசுவதில் இறங்கிவிட்டனர்.

தியாகவல்லிக்குத் தூக்கம் எங்கேவந்தது? கண்களை மூடிப் புரண்டு புரண்டு படுக்கிறாள்...

அவளது நினைவுகள் இம்மாதிரியான தனிமையில்...

வேங்கை மார்பனை எண்ணி எண்ணி...

என்ன செய்வாள்? அவளும் பெண்தானே? என்னதான் தியாகச்சிந்தையுடன் புறப்பட்டிருந்தாலும் ஆசாபாசங்களுமா அடுத்த பிறவி வரை அடம் பிடித்துக் கொண்டு சும்மா இருக்கும்?

சில சமயங்களில் அவளை கனவில் அவன் உறவாடுவது உண்டு...

அது ஒரு குற்றமே போல் அவள் விடிந்ததும் நாணினாலும், குற்றம் செய்தது யாரிடம்? என்று தன்னுள் கேட்டு, ஒரு நெட்டு முறித்து, பெருமூச்சு விட்டு அசதியில் ஒரு தன்னிறைவு காண்பாள்!

இப்போதும் அந்த நிறைவை நினைத்துப் பார்க்கிறாள்.

உதடுகளை நாவால் நீவி ஈரப்படுத்திக் கொள்கிறாள்.

இதயச் சுனையில் சன்னமான நீரருவி சுரந்து தும்புருவின் (தம்பூர்) நாதம் போலச் சுநாதமாய்க் கேட்கிறது...

கொக்கரக்கோ...

எங்கோ விடிசேவல் குரல கொடுக்கிறது..

அந்தக் குரலைத் தொடர்ந்து குதிரைக் குளம்படிச் சத்தம்...

அது மெல்ல மெல்ல அதிகரித்துத் தன்னை நாடி வருவது போலக் கேட்கிறது...

மிக அருகில் மிக அருகில் கேட்கிறது...

வேகச் சுரிப்புடன் எழுந்த தியாகவல்லி, விரைந்து ஓடிவந்து படலைத் திறந்து எட்டிப் பார்க்க...

(தொடரும்)



## அருள்வாக்கு

தினமும் தூங்கப் போகுமுன்பு இன்று ஜனஸமுதாயத்துக்கு நாம் ஏதாவது கைங்கர்யம் பண்ணினோமா என்று கேட்டுக் கொள்ள வேண்டும். ஈசுவரனைப் பற்றிப் 'பேசாத நாளெல்லாம் பிறவா நாளே' என்று தேவாரத்தில் சொல்லியிருக்கிறது. அந்த மாதிரி நாம் பரோபகாரம் பண்ணாமலே ஒருநாள் போயிற்று என்றால், அது நாம் பிறவா நாளே — அன்றைக்கு நாம் செத்துப் போனதற்கு ஸமம் தான் என்று வருத்தப்பட வேண்டும். பந்துக்கள் செத்துப் போனால் நமக்குத் தீட்டு என்று, ஒரு புண்ய காரியத்துக்கும் உதவாமல் ஒதுங்கி விடுகிறார்கள். நாமே செத்த மாதிரி என்றால் இது தான் பெரிய தீட்டு. பரோபகாரம் செய்யாத ஒரு தினத்தில் புண்யத்தின் பக்கத்திலேயே நாம் போகவில்லை, தீட்டுக்காரர்களாகி விட்டோம் —என்று feel பண்ண வேண்டும்.

நாம் எத்தனை சின்னவர்களாக இருந்தாலும் நம்மாலும் முடியக் கூடிய சின்னத் தொண்டு இல்லாமலில்லை. இப்படி அவரவரும் தனியாகவோ, ஸங்கமாகச் சேர்ந்தோ, ஏதாவது பொது நலக் கைங்கரியம் பண்ணியே ஆகவேண்டும். தண்ணீரில்லாத ஊரில் ஒரு பத்துப் பேர் சேர்ந்து கிணறு வெட்டுவது ஏதோ ஒரு பிள்ளையார் கோவில் மதில் இடிந்திருந்தால் அதை நாலு பேராகச் சேர்ந்து கட்டுவது; பூஜை நின்று போன கிராமக் கோயிலில் ஒரு காலப் பூஜைக்காவது நாலு பேரை யாசித்து மூலதனம் சேர்த்து வைப்பது. பசுக்கள் சொறிந்து கொள்வதற்கு ஒரு கல்லேனும் நாட்டுவது; நாம் படித்த நல்ல விஷயங்களை நாலு பேருக்குச் சொல்வது. எழுதுவது இரண்டு சுலோகமாவது, பாசுரமாவது நாமாவளியாவது, பாடி நாலு பேர் மனசில் பகவானைப் பற்றிய நினைப்பை உண்டாக்குவது; குப்பை கூளங்களைப் பெருக்குவது — இந்த மாதிரி ஏதாவது தொண்டு அன்றன்றும் செய்யவேண்டும். ஓசைப்படாமல் செய்ய வேண்டும் என்பது முக்கியம்.

**-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசார்ய சுவாமிகள்**

ஆபீஸில் இன்னொரு நாள் மூச்சு
முட்டற வேலை... பஸ்ஸிலே
வீடு திரும்பறப்போ விழிபிதுங்கற
கூட்டம். அப்பாடி! வீட்டுக்கு வந்தா
அலுப்புத்தீர குளியல், களைப்பினைப்
போக்கி புத்துணர்ச்சியூட்டும்
தம்ளர் ஹார்லிக்ஸ்

மால்டெட் பார்லி, முழு ஆடைப் பால் மற்றும் பொன்னிற கோதுமைகொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையை பெற்றது. எனவே, கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




புதிய காலத்திற்கேற்ப
புதிய தோற்றம்

**ஊட்டச்சத்துமிக்க பானம்**

8241

# பாதை ஓரத்து ஓவியங்கள்

வெண்ணிலவன்

அந்தச் சாலை ஓரத்துப் பூவரசம் காற்றில் மெல்ல அசைந்தது. மேலே வானத்து நிலவின் ஒளியில் அதன் இலைகளின் ஓரங்கள் ஜரிகைகளாய் மினுமினுத்தன. நிழலைப்போல் தன் காலடியில் இருளைப் பரப்பியிருந்த அந்த மரத்தடியில் அவன் உட்கார்ந்திருந்தான்.

அது ஜனநெரிசல் அதிகமுள்ள வீதி. மும்முனை சந்திப்பு. ஒருபுறம் ரயில்வே ஸ்டேஷன் ரோடு. மறுபுறம் சினிமா தியேட்டர். இன்னொரு பக்கம் பேருந்து நிலையம். இரவு என்ற விதிவிலக்கில்லாது அங்கு எப்போதும் கூட்டம் அலைமோதிக் கொண்டே இருக்கும்.

பஸ்ஸும் லாரியும் கிளப்பிய தூசும் கங்கின் ஜ்வாலையைப் போல் உதிரும் சோடியம் விளக்கின் ஒளியும் எட்டாமல் கொஞ்சம் தள்ளியிருந்த மரத்தடி தான் அவனுடைய வாடிக்கையான இடம்.

கார்த்திகை தீபங்களைப் போல இரண்டு வரிசைகளில் அவன் திரிவிளக்குகளை ஏற்றியிருந்தான். சிம்னியின் அரண் இல்லாமல் ஏதோ சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவைகளாய்த் தார் ரோட்டில் அதன் சுடர்கள் டிஸ்கோ ஆடிக் கொண்டிருந்தன.

அந்தப் பகுதியின் பாதசாரிகளில் பரிச்சயமான சிலருக்குக் கூட அவனை 'அவன்' என்றுதான் தெரியும். ஏனென்றால் அவன் தன் படைப்புக்குக் கீழே தன் பெயரைப் பொறித்துக் கொள்வதில்லை.

அவனுடைய அன்றையப் படைப்பு பரத மங்கை. தார் ரோட்டையே திரைச்சீலையாக்கித் தத்ரூபமாய் வரைந்திருந்தான். பார்த்தாலே மயிர்க்கூச்செறிகிறது. வெறும் கண்ணும்புகளையும் கரிக்கட்டிகளையும் தூரிகைகளாக்கி இத்தனை அற்புதமான சித்திரத்தை இவனால் எப்படி உருவாக்க முடிந்தது! அடவு பிடி முத்திரை பாவங்கள் ஆகிய அத்தனை இலக்கணங்களுக்கும் அவன் தன் ஓவியத்தின் மூலம் உயிரூட்டியிருந்தான். அதோ அந்த நடன மங்கை ஆடுகிறாள். தீம் தரிகிட தீம் தரிகிட தீம்....

பஸ்ஸிலிருந்து உதிர்ந்தும் வேனிலிருந்து வழிந்தும், பாதைகளிலிருந்து சங்கமித்தும் அந்த முச்சந்தியைக் கடந்து கூட்டம் எங்கேயோ ஓடிக் கொண்டிருந்தது. சர்க்கஸுக்குப் போகிறவர்கள், சினிமாவுக்குப் போகிறவர்கள், பீச்சுக்குப் போகிறவர்கள் பஸ் ஸ்டாண்டுக்குப் போகிறவர்கள்... கண்காட்சிக்குப் போகிறவர்கள்...

ஆம்! அருகில் ஒரு கண்காட்சிநடந்து கொண்டிருந்தது. ஆரத்தி ஆர்ட்ஸ் எக்ஸிபிஷன் என்று. ஆரத்தி என்ற ஒரு பெண் ஓவியர் தன்னைத்தானே நிர்வாணமாகத் தீட்டியிருக்கிறாளாம். வாழ்க்கையில் முன்னேற செக்ஸ் ஒரு



துருப்புச்சீட்டு. பணத்துக்காகவும் புகழுக்காகவும் அது விலையாக்கப்படும் வடிவங்கள்தான் எத்தனை! வழிகள்தான் எத்தனை. கண்காட்சியின் நுழைவுக் கட்டணம் பத்து ரூபாய்கள்.

ஆனால் 'இவனோ பத்து பைசாக்களுக்காக- வெறும் பத்து பைசாக்களுக்காகத் தவமிருந்து கொண்டிருந்தான். அவனுடைய பார்வை அவனது ஓவியத்தின் பாதங்களின் கீழ் தீவிரமாகியிருந்தது. கண்கள் விழப்போகும் நாணயங்களை எதிர்பார்த்துக் குறுகுறுத்துக் கொண்டிருந்தன. அவனுக்கு வேண்டியதெல்லாம் பத்தே பத்து ரசிகர்கள்! ஒரு ரூபாய் தேறிவிடும். பன்னும் டீயுமாக அன்றைய சாப்பாட்டுக்குக் கவலையில்லை.

எவ்வளவு நேரம் இப்படிச் சிலையாக நின்று கொண்டிருந்தான் என்று அவனுக்கே தெரியாது. திடீரென்று ஒரு கூட்டம் நெட்டித் தள்ளியது. அவர்கள் ஆரத்தி ஆர்ட்ஸ் எக்ஸிபிஷனிலிருந்து வருகிறார்கள்.

கூடி நின்றவர்கள் பார்த்தார்கள், ரசித்தார்கள். பரிசுகள் வெளிவரவில்லை. சின்னச் சின்ன விமர்சனங்கள் கிடைத்ததுதான் மிச்சம். மேல் வயிறு வரை பேண்ட்டை உயர்த்திக் கொண்டிருந்த இளைஞன் தன் தோழனிடம் சொல்லிக் கொண்டிருந்தான்.

''மச்சி! இந்த ஆர்ட்டிஸ்ட் பொழைக்கத் தெரியாத ஆளா இருப்பான் போலிருக்கு... போன நூற்றாண்டிலே போட வேண்டிய படத்தை இப்ப வரைஞ்சு வைச்சிருக்கான். இதிலே என்ன கவர்ச்சி இருக்கு. இதை யாரு ரசிப்பா. இதையே கொஞ்சம் செக்ஸியா பண்ணி வைச்சிருந்தா துட்டைக் கூடை கூடையா அள்ளியிருக்கலாம் இல்லியா?''

அந்த விமரிசனம் அந்த ஓவியனின் ஜீவிதத்தை அல்ல, அவனுடைய ஜீவகலையின் தன்மானத்தையே தகர்ப்பது போல் இருந்தது. அதுவரை உறைந்து போன நிலையில் இருந்த அவனுக்கு ஜிவ்வென்று ரத்தம் தலைக்கேற அவன் அந்த இளைஞன் மீது திடீரென்று பாய்ந்தான். அவனுடைய முஷ்டி இளைஞனின் காலரோடு கழுத்தில் இறுகியது. வெறி கொண்டவனாய் அவன் அந்த இளைஞனைத் தரையில் போட்டுப் புரட்டினான். சுற்றி நின்ற கூட்டம் அரண்டு பின்வாங்கியது.

''ஏண்டா சோமாறி! எனக்கா செக்ஸ் படம் போடத் தெரியாது? அது மாதிரி படத்தை அஞ்சு வயது பய போட்டுருவான் தெரியுமா? சோத்துக்கும் நகரலுக்கும் வித்தியாசம் தெரியாத முண்டமே. கலைக்கும் அசிங்கத்துக்கும் வித்தியாசம் தெரியாத கசமாலம். கலைன்னா என்னான்னு தெரியுமா? என் ஆர்ட்டை ரசிக்கத் தெரிஞ்சா ரசி. இல்லே கம்முனு போ!''

அடிபட்டு விழுந்த அந்த இளைஞன் விடுபட்டு எழுந்த போது அந்த இடத்தின் கூட்டம் முழுவதும் கலைந்து போய் இருந்தது. கல் எறிந்ததும் கலைந்து போகும் கானகத்துப் பறவைகளைப் போல், கலவரம் என்றாலே நகரத்து மாந்தருக்கு அலர்ஜியாயிற்றே. கசங்கிப்போன சட்டையைச் சரி செய்துகொண்ட அந்த இளைஞனும் அவனுடைய தோழனும் அந்தப் பாதையோர ஓவியனை எதிர்க்கத் துணிவில்லாது திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே கண்ணை விட்டு மறைந்து போயினர்.

உணர்ச்சிவசப்பட்ட நிலையை அந்த ஓவியன் அடுத்த சில நிமிடங்களில் சமனப் படுத்திக் கொண்டான்.

வானத்தைப் பளிச்சென்று மின்னல் ஒன்று கீறியது. பொட்டுப் பொட்டாய் மழைத்துளிகள் சிதற ஆரம்பித்தன. சாரல் வலுத்து ஓடிவரும் நீர்ச் சுழிப்பில் அவனுடைய கண் முன்னால் அவனுடைய ஓவியம் கரைய ஆரம்பித்தது.



# சில விஷயங்கள்

**சிவதர்ஷிணி**



''**மே** ஐ கமின் ஸார்?''

''கமின்.''

கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான் பரசு. சுழல் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்திருந்தார் மானேஜர் சடகோபன். விரலிடுக்கில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது. பாதி பார்த்த ஃபைல் மேஜைமீது விரிந்து கிடந்தது.

உட்காரும்படி அவனைக் கைகாட்டினார் சடகோபன்.

''நானே உங்களைக் கூப்பிடணும்னு இருந்தேன் மிஸ்டர் பரசுராமன்!''

''சொல்லுங்க, ஸார்!'' என்றார் பரசு.

டிரேயில் கிடந்த சாவியை எடுத்து இடதுபுறம் இருந்த ஸ்டீல் அலமாரியைத் திறந்தார் சடகோபன். குறிப்பாக ஒரு ஃபைலை உருவியெடுத்து மேஜையின்மீது வைத்தார்.

அதைப் பார்த்தவுடனே தெரிந்துகொண்டான் பரசு. தலைமை அலுவலகத்திற்கு அனுப்பிய ஃபைல்! மிஸ்டர் குருபாதம் அதைத் தயார் செய்திருந்தது பரசுவுக்குத் தெளிவாக நினைவிருந்தது.

''குருபாதம் தயார் செஞ்ச ரிப்போர்ட் எம்.டிக்குப் பிடிக்கலே மிஸ்டர் பரசுராமன். இன்னும் கூட இதை பிரிலியண்டா பண்ணி யிருக்கலாம்னு நெனைக்கிறார் எம்.டி. அதுக்கு உங்களை நான் சஜெஸ்ட் பண்ணியிருக்கேன் அவர்கிட்டே.''

''அப்படியா ஸார்?''

''ஆமாம்! இன்னைக்கு என்ன சனிக்கிழமையா? ஞாயிறு, திங்கட்கிழமை, இந்த ஃபைலைத் தயார் பண்ணுங்க...''

''சரி ஸார்.''

''பை த பை, உங்களுக்குக் கூடிய சீக்கிரம் ஒரு பிரமோஷன் இருக்கும்னு நெனைக்கிறேன்.''

பரசுவுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. இன்னும் இரண்டு சீனியர்கள் முன்னால் இருக்கும்போது தனக்குப் பிரமோஷனு! வானத்தில் பறப்பது போல் உணர்ந்தான். ''தாங்க்யூ ஸார்.''

அடக்கத்துடன் சொல்ல முயன்ற போதிலும் அவனது சந்தோஷத்தைக் குரல் காட்டிக் கொடுக்கவே செய்தது.

''எம். டி. உங்களைப் பத்தித் தெரிஞ்சுக்க இந்த ஃபைல் ஒரு பதச்சோறு மிஸ்டர் பரசுராமன். இதை நீங்க தயார் பண்ற முறையிலேதான் உங்க பிரமோஷனே இருக்குதுன்னு நான் நினைக்கிறேன்.''

''ஐ வில் ட்ரை மை பெஸ்ட் ஸார்'' என்றான் பரசு உறுதியான குரலில்.

''எஸ், நீங்க ஏதோ சொல்ல வந்தீங்க இல்லே?'' என்று நினைவூட்டினார் சடகோபன்.

''மத்தியானம் ஒரு அரைநாள் லீவு கேட்கலாம்னு வந்தேன். வேண்டாம் ஸார், ஃபைலைக் கவனிக்கறேன். பெரிசா ஒண்ணுமில்லே. ஒரு நண்பரோட பொண்ணுக்குப் பிறந்த நாள் விருந்து! போனிலேயே 'ஹாப்பி பர்த் டே' சொல்லிட்டாப் போச்சு.''

''நோ நோ. போயிட்டு வாங்க... ஃபைலை இப்பவே பார்க்கணும்னு இல்லே. வேணுமானா வீட்டுக்கு எடுத்திட்டுப் போய்ச் சௌகரியமாய்ப் பாருங்க. திங்கட்கிழமை பிரிஃபேர் பண்ணிக் கொண்டு வந்தால் போதும்.''

''தாங்க்யூ ஸார்'' எழுந்தான் பரசு.

''ஒரு நிமிஷம் பரசுராமன்! ரெண்டு நாளைக்கு முன்னாடி நான் மாயவரம் போயிருந்தேன்'' என்றார் சடகோபன்.

அவனுக்குத் துணுக்கென்றது.

''நானும் உங்க மாமனார் ஊர்க்காரன் தான். உங்க மாமனார் கூட என் சம்சாரத் தோட வகையறுவிலே தூரத்து உறவு. எனக்கே உங்க மாமனார் சொல்லித்தான் தெரியும். கேக்கிறதுக்குத் தப்பா நினைச்சுக்காதீங்க. உங்க மனைவி நாலு மாசமா அம்மா வீட்டிலேயே இருக்காளாம். நீங்க கூப்பிடவே இல்லையாமே?''

உதட்டைக் கடித்துக் கொண்டான் பரசு.

''மனுஷன்னு இருந்தால் கோபதாபம் வரத்தான் செய்யும். என் அனுபவத்திலே இருந்து சொல்றேன் பரசுராமன். பெண்களுக்கு எதையும் ஈஸியா எடுத்துக்கவே தெரியாது. அவங்க வாய் இருக்கே, அவங்க பலமும் அதுதான் பலவீனமும் அதுதான். நாம்தான் அட்ஜெஸ்ட் பண்ணிப் போகணும். விவரம் தெரிஞ்சவர் நீங்க. அதிகம் சொல்ல வேண்டியதில்லே.''

விடை கொடுத்தார் சடகோபன்.

---

அவர்: உன் மனைவியிடம் உனக்குப் பிடித்தது என்ன?

இவர்: அவளின் சம்பளம்.

—சுந்தர்



சேலைத் தலைப்பை விரித்துச் சமையற்கட்டில் தலைசாய்த்திருந்த அம்மா நடையில் செருப்புச் சத்தம் கேட்டதும் எழுந்து விட்டாள்.

''என்னடா பரசு?''

''அரைநாள் லீவு போட்டுட்டேன்.''

''ஏன்?''

''தலையை வலிக்கிற மாதிரி இருக்கு. கொஞ்சம் காப்பி கொடு.''

எரிச்சலுடன் உடைகளைக் கழற்றி எறிந்து விட்டு லுங்கியைச் சுற்றிக் கொண்டான். கொற்றடிக்குப் போய்க் குளிர்ந்த நீரை வாரி வாரி முகத்தில் இறைத்துக் கொண்டான்.

சலிப்பாகவும் இருந்தது. கோபமாகவும் இருந்தது. யார் மீது கோபம்? தன் மீதா மனைவி சரளா மீதா. மானேஜர் சடகோபன் மேலா... தெரியவில்லை.

தன் அப்பனிடம் சொல்லி வேறு ஒருவர் மூலம் எனக்குக்கோபதேசம் செய்விக்கிறாளோ? முன்னேயெங்கே போயிற்று அந்தப்புத்தி?

துண்டால் தன் முகத்தைத் துடைத்துக் கொண்டு தன் அறைக்கு வந்தான்.

மேஜைமீது காலையில் வந்திருந்த தபால்கள் கிடந்தன. இரண்டு மாத சஞ்சிகைகள், ஒரு திருமண அழைப்பிதழ், மின்சார பில். ஒரு இன்லண்ட் லெட்டர்.

லெட்டரைப் பார்த்ததுமே தெரிந்து கொண்டான். அவளுடைய கையெழுத்து!

''...தெரிந்தோ தெரியாமலோ தப்பாய்ப் பேசியிருந்தால் மன்னிக்க வேண்டும். இனிமேல் புத்தியாக நடந்து கொள்வேன். வாயைத் தைத்துப் போட்டுக் கொள்வேன். ஊராரின் வம்புப் பேச்சைக் கேட்டுக் கேட்டு நொந்து கிடக்கிறேன். தயவு பண்ணி உடனே வந்து அழைத்துப் போகவும். என்றும் உங்கள் நினைவாகவே இருக்கும் அடியாள் சரளா.''

இதுமாதிரி ஆயிரம் கடிதங்கள் எழுதி விட்டாள். திமிர்ப்பிடித்த கழுதை. நானு

மனம் இளகப்போகிறேன்! நன்றாக அனுபவிக்கட்டும். அப்போது தான் புத்தி வரும்.

ஆபீஸிலிருந்து கொண்டு வந்திருந்த ஃபைலிலேயே மனம் வட்டமிட்டது. தனது பிரமோஷனை நிர்ணயிக்க இருக்கும் பிரம்மா!

பிரமாதமாகத் தயாரித்து எம். டி. யின் பாராட்டுதலைப் பெற்று விட வேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்டான்.

படிக்க ஆரம்பித்தான்.

பர்த்டே பார்ட்டிக்குப் போகாவிட்டால் என்ன? எவ்வளவு நேரம் விரயமாகிறது. அந்த நேரத்தில் ஃபைலில் கால்பாகம் முடித்து விடலாம்.

வாயிற்படியில் நிழலாடியது.

பார்த்தான். அம்மா நின்று கொண்டிருந்தாள். தயக்கத்தோடு நின்றது போலத் தெரிந்தது.

''பாச்சா ஆஸ்பத்திரியிலே இருக்கானும்'' என்று மென்று விழுங்கினள் அம்மா.

அதிர்ந்தான் பரசு. ''யாரு ரேவதி புருஷனு?''

ரேவதி அவன் தங்கை. அவள் கணவன் பாலசந்திரன் கார்ப்பரேஷன் குமாஸ்தா. நாலேந்து குழந்தைகள். கஷ்ட ஜீவனம்.

''என்னவோ வயிற்றை வலிக்கிறதுன்னு சொன்னனும். டெஸ்ட் பண்ணிட்டு டாக்டர் அல்சர்ங்கறுனே அதுவா இருக்கலாம்னுராம். ரெண்டு நாள் ஆஸ்பத்திரியிலே இருக்கச் சொல்லியிருக்கார். பாவம் ரேவதி! குழந்தைகளை விட்டுட்டு எப்படி என்ன பண்ணுவாள்? அதுதான் நீ இன்னைக்கு அவனுக்குத் துணையா ஆஸ்பத்திரியில இருக்கலாம்னு...''

ஃபைல் வேலை பாதியில் நிற்கிற எரிச்சலுடன் தங்கை புருஷன் வயிற்று வலியும் அவனை நிதானம் இழக்கச் செய்துவிடும்போல இருந்தது.

''எப்படிப்பட்ட அவசரத்திலே நான் இருக்கிறேன். சே! நேரம் காலம் தெரியாமல் மனுஷனைக் கொல்றியே!''




# கல்கி

வழங்கும்

## நேரம் நல்ல நேரம்



விவிதபாரதி நிகழ்ச்சி
பிரதி வியாழன் இரவு 9-30க்கு
சென்னை, திருச்சி நிலையங்களில்
ஒலிபரப்பாகிறது

கல்கி வாசகர்களுடன்
உரையாடுபவர்

## கவிஞர் வைரமுத்து

இன்றிரவு ஜூன் 21ல

கேட்கத் தவறாதீர்கள்!

தயாரிப்பு: எஸ். வி. ரமணன்

''குழந்தைக்கு நம்மை விட்டால் வேறு யார் பரசு?'' என்று கண் கலங்கினள் அம்மா.

''சரி, சரி.''

ஃபைலை மூடிவிட்டு எழுந்தான்.

சாப்பிட்டதாகப் பேர் பண்ணிவிட்டு உடை மாற்றிக் கொண்டான்.

''சாயங்காலமாப் போனால் போதும்பா. காலையிலே நான் போயிட்டு வந்தேன். ரேவதி இப்போ அங்கேதான் இருக்கிறு. சாயங்காலமாய்ப் போய் அவளை அனுப்பிட்டுக் காலையிலே வரைக்கும் பாச்சாவுக்குத் துணையாக இரு. விடிஞ்சதும் ரேவதி வந்திடுவா.''

''அஞ்சு மணிக்குப் போனால் போதுமா?''

''போதும்பா.''

மீண்டும் ஃபைலை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்த பரசு, நாலே முக்கால் மணிக்கு அம்மா வந்து நினைவுபடுத்தியதும் தான் எழுந்தான்.

பால் நிரம்பிய ஃப்ளாஸ்கையும், சாப்பாட்டுப் பாத்திரத்தையும் தூக்கிக்கொண்டு கிளம்பினன்.

தி. நகர் சந்து ஒன்றில் இருந்தது அந்த ஆஸ்பத்திரி. சாரா கிளினிக் என்று அறிவித்தது போர்டு.

உள்ளே நுழைந்தான்.

பழைய காலத்து வீடு. அதைக் கிளினிக்காக மாற்றியிருந்தார்கள்.

ஜன்னலோரமாக இருந்த கட்டிலில் படுத்திருந்தான் பாலசந்திரன். தலைமாட்டில் உட்கார்ந்திருந்த ரேவதி பரசுவைக் கண்டதும் எழுந்தாள். ஃப்ளாஸ்கையும், பாத்திரத்தையும் வாங்கி வைத்தாள்.

''வாருங்கள்'' என்றான் பாலசந்திரன்.

''தேவலையா? எப்படி இருக்கு?''

''டாக்டர் இன்ஜெக்ஷன் போட்டார். வலி கொஞ்சம் கொறைஞ்ச மாதிரி இருக்கிறது.''

''ஃப்ளாஸ்க்கில் இருக்கும் பாலை விட்டுக் கொடு'' என்றான் பரசு ரேவதியிடம்.

''இருக்கட்டும் கொஞ்ச நேரம் கழித்துச் சாப்பிட்டுக் கொள்கிறேன்.''

''அப்படியானால் நீ போ ரேவதி. நான் பார்த்துக்கொள்கிறேன்!''

''உங்களுக்கு ரொம்பத் தொல்லை கொடுக்கிறேன்.'' சங்கடத்துடன் சிரித்தான் பாலசந்திரன்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே.''

தர வேண்டிய மாத்திரைகளையும் நேரத்தையும் பரசுவிடம் சொன்னாள் ரேவதி.

# பட்டுப் புடவை பரிசுத் திட்டம்

(எல்லா வாசகர்களும் கலந்து கொள்ளலாம்; பெண்களுக்காக மட்டுமல்ல)



போட்டி 8 : நண்பரிடம் நல்ல பழக்கம்

உங்கள் நண்பரிடம் ஒரு வித்தியாசமான நல்ல பழக்கம் இருப்பதைக் கவனிக்கிறீர்கள்; அதை வேறு பலரும் பின்பற்ற வேண்டும் என்று விரும்புகிறீர்கள் என்றால் அதனை எதிரே உள்ள வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். உறையின்மேல், ''நண்பரிடம் நல்ல பழக்கம்'' என்று குறிப்பிடவும்.

பிரசுரமானால் சன்மானம் உண்டு. தவிர, குலுக்கல் முறையில் ஒரு வாசகருக்குப் பட்டுப் புடவைப் பரிசும் உண்டு.

முடிவு தேதி: 9.7.84.

**நினைவிருக்கட்டும் 45 பட்டுப்புடவைகளுள் ஒன்றை நீங்கள் பெற வாய்ப்புள்ளது. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு பெறுங்கள்.**

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

..............................




# ராகமாலிகா பட்டு சேலைகள்

சுகன் ஆர்கேட்,

நெ. 12பி, நாகேஸ்வரராவ் ரோடு, பனகல் பார்க் எதிரில்

தியாகராய நகர், சென்னை-600 017

(ஞாயிறு கடை உண்டு)

பாத்ரூமிற்கு வழி சொன்னான். "பாய் தலையணை இருக்கு அண்ணா. படுத்துக்கோ. விடிஞ்சதும் வந்திடுவேன்."

"சரி, புறப்படு."

அவள் போன பிறகு தான் சும்மா உட்கார்ந்திருப்பதன் கஷ்டம் பரசுவுக்குப்புரிந்தது. ஆஸ்பத்திரிக்கே உரித்தான பிரத்தியேக மருந்து நெடி. நோயாளிகளின் முனகல். பெண்டுலம் கடிகாரத்தின் இடைவிடாத டிக்டிக். ஓசை.

எதுவோ கனமாக மேலே விழுந்து அழுத்துகிற மாதிரி உணர்ந்தான்.

மருந்தின் தன்மையாலோ, சளைப்பாலோ மெல்லக்கண்ணயர்ந்திருந்தான் பாலசந்திரன்.

டக் டக் என்ற பூட்ஸ் ஒலி பரசுவின் யோசனையைக் கலைத்தது. சிவந்த நிறமும் நல்ல உயரமுமாக ஒருவர் கட்டிலை அணுகினார். டாக்டர் என்று யூகித்து எழுந்தான் பரசு. அவருக்கு நாற்பது வயது இருக்கலாம் என்று தோன்றியது. தாஜ் கோரமண்டல் ஹோட்டலுக்கு விருந்திற்குப் போகிறவர் போல டிரிம்மாக உடை அணிந்திருந்தார்.

பாலசந்திரனின் உடல்நிலையை விசாரித்தான் பரசு.

"அல்சர்னுதான் நினைக்கிறேன். செக்அப் முடிஞ்சால் நாளைக்குத் தீர்மானமாத் தெரியும். காரம் கூடாது. ஸ்மோக் பண்றதை அவாய்ட் பண்ணணும். காப்பி, டீ வேண்டாம். பால் தரலாம்" என்றார். பேச்சில் மலையாள வாடை.

அவர் அடுத்த கட்டிலுக்குப் போனதும் எழுந்தான் பரசு. வெளியே வந்தான். மணி ஏழு கூட ஆகவில்லை. பையைக் கையோடு கொண்டு வந்திருந்தால் தேவலையோ என்று நினைத்தான். ச்சீ! நன்றாக இருக்காது. நோயாளிக்குத் துணையாக வந்தவன் பையை வைத்து எழுதிக்கொண்டிருந்தால் பார்ப்பவர்கள் என்ன நினைப்பார்கள்?

"ஏண்டாப்பா! உனக்கு என்ன செய்யறது?" என்று வெளி வராந்தாவில் உட்கார்ந்திருந்த ஒரு பாட்டி பரசுவைப் பார்த்துக் கேட்டாள்.

"எனக்கு ஒண்ணுமில்லே பாட்டி. தங்கை புருஷனுக்கு வயிற்றுக் கோளாறு."

"இப்பத் தேவலையா இருக்கா?"

"இருக்கு."

தன் கதையைச் சொன்னாள் பாட்டி. "நானும் உன் போலத் துணைக்கு வந்தவள் தான். மச்சினர் பிள்ளைக்கு ஆஸ்த்மா!" என்று தொடங்கி நேற்று வரை பார்த்த கைவைத்தியம், நாட்டு மருந்து என்று ஏதேதோ சொல்லிக் கொண்டு போனாள். கேட்கச் சலிப்பாக இருந்தது.

அப்படி இப்படி நேரத்தைத தள்ளிவிட்டுப் பார்த்தால் மணி எட்டரை.

பாலசந்திரனை எழுப்பி உணவு கொடுத்து மாத்திரை விழுங்கச் செய்து தலையணைகளைச் சரி செய்து படுக்க வைத்தான். படுத்ததும் உறங்கிப் போனான் பாலசந்திரன்.

தூக்கம் வரவில்லை பரசுவுக்கு.

டாக்டரின் மேஜையை அடுத்துக் கிடந்த சில புத்தகங்களை எடுத்துப் பார்த்தான். எல்லாம் மலையாளம். பத்திரிகையின் பெயரே தெரியவில்லை.

எரிச்சலுடன் போட்டுவிட்டு எழுந்தான். குழல் விளக்கின் 'ங்கொய்' ஒலியும், கடிகார டிக்டிக்கும் அவனை என்னவோ செய்தது.

வெகு நேரத்திற்குப் பிறகு தான் வந்து டாக்டரின் மனைவி குழல் விளக்கை அணைத்து விட்டு இரவு விளக்கை ஏற்றிச் சென்றாள்.

கண்களை மூடித் தூங்க முயன்ற பரசுவின் முழங்கையில் எதுவோ சுரீர் என்றது. துடைத்துவிட்டுப் புரண்டு படுத்தான். கொஞ்ச நேரத்தில் இடது காலில் சுரீர். கொசுக்கள்!

போர்வை இல்லாததற்கு வருந்தினான்பரசு.

இரவு எவ்வளவு நீளமானது என்பதை அன்றுதான் உணர்ந்தான் அவன். புரண்டு புரண்டு அரைத் தூக்கத்திலும் பையையே கனவு கண்டு கொண்டு தூங்கியதாய்ப் பேர் பண்ணிவிட்டுத் துயில் கலைந்தான்.

ஆறு டூ ஆறு. பன்னிரண்டு மணி நேரம் வீண். எழுந்து முகம் கழுவிக்கொண்டு இருக்கையில் ரேவதி வந்து விட்டாள்.

"அண்ணா! அவர் எழுந்தாச்சா?"

"இல்லே."

"இந்தா காப்பி உனக்கு."

சூடான காப்பியை ஆவலுடன் பருகினான். அவள் இடுப்பில் இருந்த குழந்தையின் கன்னத்தில் செல்லமாகத் தட்டிவிட்டுக் கிளம்பினான்.

ஜெயிலில் இருந்து விடுபட்டது போல் ஓர் உணர்வு. காத்திருப்பது எவ்வளவு கடினம் என்பதை உணர்ந்தான்.

பஸ்ஸைப் பார்த்துக் கொண்டிருக்கப் பொறுமை இல்லை. எதிர்ப்பட்ட டாக்ஸியைக் கூப்பிட்டு ஏறி வீடு வந்து சேர்ந்தான்.

"வெந்நீர் போட்டாகி விட்டது பரசு" கூறியபடி அவன் அறைக்குள் நுழைந்த அம்மா வியப்புடன் புருவங்களை உயர்த்தினாள்.

"என்னடா, எங்கேயோ பயணம் போகிறவன் மாதிரி துணிகளைப் பெட்டியில் அடுக்கறே.?"

"பயணம்தான்."

"பயணமா?"

"மாயவரத்திற்கு! சரளாவைக் கூட்டி வர" என்றான் பரசு தீர்மானமான குரலில்.

அவசரமாகப் பெட்டியில் துணிகளை அடுக்கினான். அம்மா சொல்லிக் கொண்டிருந்தது அவன் காதில் ஏறவில்லை. மனைவியை அழைத்து வரப் புறப்படும் அவசரத்தில் இருந்தான்.

காத்திருப்பதன் கஷ்டத்தைப் புரிந்து கொண்ட அவசரம் அது.

## வாசகர் பங்கு

பட்டுப் புடவை பரிசுத் திட்டத்துக்கு வாராவாரம் என்ன போட்டி வைக்கலாம் என்று கேட்டதற்கு ஏராளமான வாசகர்கள் யோசனைகள் தெரிவித்துள்ளனர், அவற்றுள் 23 போட்டிகள் ஏற்கப்பட்டுக் கீழே பிரசுரமாகிச் சன்மானம் பெறுகின்றன. இவற்றை வாரம் ஒன்றாக அடுத்து வரும் பல கல்கி இதழ்களில் பிரசுரித்து வாசகர்களைப் போட்டியில் பங்கேற்குமாறு கோர எண்ணியிருக்கிறோம். இப்போது முதலே யோசிக்கத் தொடங்கலாமே?



**கா. சாரதா, அரியலூர்**

முதன் முதலில் உங்களைப் பெண் பார்க்க வந்த போது உங்கள் மனநிலை எப்படி இருந்தது?

**நிர்மலா ஜான்ஸன், திருச்சி-17**

விதியை மதியால் வெல்லலாம்'' என்பதற்கு உதாரணமாக உங்கள் வாழ்வில் நடந்த சம்பவத்தைச் சுவைபடச் சுருக்கமாக எழுதி அனுப்புங்கள்.



**என். சிவன், நாகர்கோவில்-1**

சென்ற வாரம் நீங்கள் பார்த்த ஒரு திரைப்படம் பற்றிப் பத்து வரி விமர்சனம்.

**ஆர். அப்துல், திருச்சி-20**

''விஷம்போல் ஏறிவரும் விலைவாசிகளுக்கேற்பச் சிக்கனமாக இருப்பது எப்படி?''

**எஸ். பிரேமா, ஜாம்ஷெட்பூர்-5**

கல்கியில் அரைப் பக்கத்தில் ஒரு சிறுகதை எழுத முடியுமா?

**வி. பழனியப்பன், சென்னை-1**

''அலுவலகத்திலோ வீட்டிலோ நீங்கள் செய்த காரியத்தில் ஒரு சிறு தவறு ஏற்பட்டுச் சுற்றியிருந்தவர்களும் சிரித்து நீங்களும் சேர்ந்து சிரித்திருக்கக் கூடும். அந்த நிகழ்ச்சி என்ன?''



**திருமதி ஜெயந்தி, சென்னை-17**

அட்மிஷன் சமயத்தில் உங்கள் குழந்தையைப் பள்ளியில் சேர்த்த போது ஏற்பட்ட ரசமான அனுபவத்தை ''அட்மிஷன் அனுபவம்'' என்ற தலைப்பில் எழுதவும்.

**விஜயா ரங்கநாதன், டோம்பிவில்லி (மேற்கு)**

''என் மனக்குறை'' என்னும் தலைப்பில் வாசகர்களின் மனக்குறையைக் கேட்டு அறியலாம்!



**எஸ். வி. ராஜசேகர், சென்னை-5**

'இந்தக் கோடையில் உங்களைக் குளுமையாக்கிய அனுபவம் எது?

**திருமதி கமலா மாரியப்பன், கோவை-11**

மூன்று முடிச்சு உங்கள் கழுத்தில் விழுந்த போது என்ன உணர்ச்சி ஏற்பட்டது என்று எழுதுங்கள்.

**எஸ். கிரிஜா, கோவை-1**

''தங்களுக்கு ஏற்பட்ட தர்மசங்கடமான நிலை.'

எல். கண்ணன், பம்பாய்-37

பலவிதமாய்ப் பலரிடம் ஏமாந்திருப் பார்கள் வாசகர்கள். சுவையான ஏமாற் றத்திற்குச் சரியான பரிசு தருக.

வெ. சேதுராமன், தஞ்சாவூர்-1

வேலைக்குச் செல்லாத பெண்கள் வீட்டி லேயே இருந்து கொண்டு வருவாயைப் பெருக்க வழிமுறைகள் கேட்கலாமே!

பாலின் ஏசுராஜ், பம்பாய்-78

மிகவும் குறும்பு செய்யும் உங்கள் குழந்தையை நீங்கள் சமாளிக்கும் விதத்தைச் சுருக்கமாக எங்களுக்குத் தெரிவியுங்களேன்?



புதுவை கோதை, பாண்டிச்சேரி-3

''உங்களைக் கவர்ந்த இரையுலக 'காதல் ஜோடி' யார்? ஏன்? நாலே வரிகளில் சொல் லுங்களேன்.''

என். உமா, மதுரை-1

முகமூடிக் கொள்ளைக்காரர்கள் உங்கள் வீட்டிற்கு விஜயம் செய்தால் நீங்கள் என்ன செய்வீர்கள்?




எஸ். டி. பாலசுப்ரமணியன், கமுதி-3

சிலர் தூக்கத்தில் தங்களை அறியாமல் ரகசியங்களை உளறி மாட்டிக் கொள்வர். உங்கள் நண்பர்கள், உறவினர்கள் அப்படி மாட்டிக் கொண்டு விழித்ததை சுவாரசிய மானதாக இருந்தால் எழுதலாமே.

ஜி. எஸ். பாலகிருஷ்ணன், கோவை-4

உங்கள் உருக்கமான பிரார்த்தனைக்குக் கடவுள் எப்பொழுதாவது செவிசாய்த்து உதவினதுண்டா?

மு. ரமேஷ்குமார், போடிநாயக்கனூர்

வாழ்க்கையில் எல்லோரும் அசடு வழிந்த வர்களே! மிகச் சிறப்பாக அசடு வழிந்த அனுபவங்களை வரவேற்கும் போட்டிவைக்க லாம்.



திருமதி ராஜேஸ்வரி, திருச்சி-17

''உங்கள் கணவருள்ள ஒரு விசித்திரமான பழக்கம்'' பற்றி இதர வாசகர்களுக்குக் கூறுங்கள்.

சாரதா சென்னை-61

முதன் முதலில் வேலைக்குப் போன போது ஏற்பட்ட ஓர் அனுபவம்.



நர்கீஸ் அகமது, தூத்துக்குடி-1

முதல் குழந்தை, எந்த குழந்தை வேண் டும் என்று எதிர்பார்க்கிறீர்கள்? ஏன்?

டி. ராமச்சந்திரன், கோவை-1

''திடீர் செலவுகளை எப்படிச் சமா ளிப்பது?''

**மேற்படி வாசகர்களுள் ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவை அன்பளிப்பைக் குலுக்கல்முறையில்பெறும்அதிர்ஷ்டசாலி:**

எஸ். டி. பாலசுப்பிரமணியன்
ஏஜெண்ட், எல். ஐ. ஸி. ஆப் இந்தியா
சுபா மார்ட், 238, நாடார் பஜார், கமுதி-623603

# நெஞ்சக்கனல்

நா. பார்த்தசாரதி

## அத்தியாயம் 11

திருமலைக்கு ஆசிரியராக இருந்து கற்பித்த சர்மா அவனுக்கே உதவியாளர் ஆகிவிட்டார். எல்லாச் செலவும் போக ஊரிலுள்ள குடும்பத்துக்கு மாதம் ஐந்நூறு ரூபாய் வரை அனுப்ப முடிகிறாற் போல ஒரு வேலையில் இருக்க நேர்ந்ததைத் தம் அதிர்ஷ்டமாக எண்ணினார் சர்மா. அவருடைய வயதுக்கும், அறிவுக்கும், அநுபவத்துக்கும் சினிமா உலக நடைமுறைகளின் விடலைத்தனமான ஆட்களும் பழக்கவழக்கங்களும் ஒத்து வரவில்லை என்றாலும் அவரை நன்றாகப் புரிந்து கொண்டிருந்த — அவருக்கு நன்றாகப் புரிந்த திருமலையோடு சேர்ந்து வேலை செய்வதில் சிரமம் எதுவுமே நேரவில்லை.

திருமலை தாறுமாறாகவும், எழுத்துப் பிழையோடும் எழுதிப் போடுகிற ஸ்கிரிப்டுகளைத் திருத்திச் சரியாக எழுதி வைப்பது ஒன்றுதான் அவரது வேலையாயிருந்தது. பள்ளி நாட்களில் பையன்களின் காம்போசிஷன் நோட்டைத் திருத்துகிற மாதிரி இப்போது திருமலையின் வசனங்களில் எழுத்துப் பிழைகளையும், ஒலிப்பிழைகளையும் திருத்திப் போடுகிற வேலையைச் செய்தார் அவர். பேர் என்னவோ ஸ்கிரிப்ட் அஸிஸ்டெண்ட் என்றுதான் கொடுத்திருந்தார்கள். வாழ்க்கைத் தேவைகளும், வறுமையும் அவரை அந்த வயதிலும் உழைக்க வைத்திருந்தன.

எழிலிருப்பிலிருந்து சென்னைக்குப் புறப்படும் போது ஏற்பட்ட கசப்பான அநுபவங்களைத் திருமலை மெல்ல மெல்ல மறந்துவிட்டான். புதிய புகழும் வசதிகளும் பழைய துன்பங்களைச் சுலபமாக மறந்து போகச் செய்திருந்தன. எப்போதாவது சண்பகத்தின் நினைவு வந்து போகும். அவள் தான் அடிபட்டு விழுந்து படுத்த படுக்கையாகக் கிடந்த நாட்களில் நந்தவனத்தில் செய்த செருஷைகள் நினைவு வரும். அந்தச் சண்பகமா இப்படிக் கடுமையான வார்த்தைகளை எல்லாம் பேசினாள் என்று கூடவே வியப்பும் ஏற்படும். 'ஆசை அறுபது நாள், மோகம் முப்பது நாள்' என்பது போல் விளையாடி விட்டுத் தான் அவளைத் திரும்பிப் பாராமல் காடு மேய ஆரம்பித்ததாலேயே அவள் விரக்தியடைந்து மாற நேர்ந்தது என்பது அவனுக்கு



உறைக்கவில்லை. சண்பகம் தன்னை மிகவும் மரியாதைக் குறைவாகப் பேசிவிட்டுக் குழந்தையையும் தூக்கிக் கொண்டு தம்பியோடு ஓடிவிட்டாள் என்பது மட்டும் நினைவுக்கு வந்தது. ஊரிலிருந்து வந்து போன யார் மூலமோ, 'அவள் நந்தவனத்தில் பூத்தொடுத்துக் காலந்தள்ளுகிறாள், மகன் இராவணன் என்கிற ராஜாவை உள்ளூர்க் கான்வெண்ட் பள்ளி ஒன்றில் சேர்த்திருக்கிறாள் என்றெல்லாம் தகவல்கள் காதில் விழுந்தன.

திருமலை கடந்த காலத்தையும், கவலைகளையும் மறக்க நிறையக் குடிக்க ஆரம்பித்தான். ஊரில் எப்போதாவது பீடி என்றிருந்த புகைப் பழக்கம் இப்போது 'சிகரெட்' ஆகி 'செயின் ஸ்மோக்கிங்' என்ற நிலைக்குக் கொண்டு வந்து விட்டிருந்தது. எவ்வளவோ மனக்கசப்பு இருந்தும், படிக்கிற மகனுக்கு உதவியாக இருக்கட்டும் என்று சண்பகத்தின் தம்பி பெயருக்கு ஆயிரம் ரூபாய்க்கு டிராஃப்ட் ஒன்று எடுத்து அனுப்பியிருந்தான் அவன்.

''நமது மனததாங்கல்கள் நம்மோடு போகட்டும். குழந்தை சிரமப்பட வேண்டாம். அவனை நல்ல கான்வெண்டாகப் பார்த்துச் சேர்த்திருப்பது பற்றி மகிழ்ச்சி. உங்கள் சிரமங்களோடு அவனது படிப்புச் செலவுகளையும் தாங்குவது முடியாத காரியம் என்று எனக்குப் புரிகிறது. என் மேல் கோபப்படாமல் அவ்வப்போது நான் இப்படி அனுப்புகிற பணத்தை ஏற்றுக் குழந்தையின் படிப்புச் செலவுகளுக்குப்பயன் படுத்திக் கொள்ளவும்'' என்று அந்த டிராஃப்டோடு சண்பகத்தின் தம்பிக்கு ஒரு கடிதமும் வைத்திருந்தான் அவன்.

டிராஃப்ட் கவரில் அறைந்த பந்தாகத் திரும்பி வந்து சேர்ந்தது. அதோடு சண்பகத்தின் தம்பி கடுமையான மொழி நடையில் ஒரு கடிதமும் எழுதியிருந்தான்.

'நான் ஒருவன் இருக்கிற வரையில் என் அக்காளும், மருமகனும் நாதியற்றுப் போய் விட மாட்டார்கள். உங்கள் பணத் திமிரும், கொழுப்பும் தான் உங்களை இப்படி எல்லாம் செய்யத் தூண்டுகிறது. இதை ஏற்றுக் கொள்கிற அளவு நாங்கள் மானங்கெட்டுப் போய் விடவில்லை. கோயில் வாசலில் பூத்தொடுத்து விற்றாவது தன் மகனைக் காப்பாற்ற முடியும் என்று என் அக்காளுக்கு நம்பிக்கையிருக்கிறது' —என்பதாகக் குமுறலோடு எழுதப்பட்டிருந்தது சண்பகத்தின் தம்பி கடிதம். திருமலைக்கு முகத்தில் அறைந்த மாதிரி இருந்தது. அதன்பின் ஊருக்குப் பணம் அனுப்பும் எண்ணம் அவனுக்கு வரவே இல்லை. தாயிடமிருந்து மகனைப் பிரித்து மகன் தன்னோடுதான் இருக்க வேண்டும் என்று வழக்குப் போடலாம். என்பதாகத் திருமலைக்கு யாரோ யோசனை சொல்லித் தூண்டி விட்டார்கள். அந்த யோசனையை அவன் ஏற்கவில்லை. தன்னோடு இருந்தால் பையனைக் கவனிக்கத் தனக்கு நேரமிருக்காது என்கிற பயமும், தான் வசிக்கிற ஆசைநாயகி வீட்டில் சண்பகத்துக்குப் பிறந்த பிள்ளை என்பதாலேயே அவன் அநுபவிக்க நேரும் கொடுமைகளைப் பற்றிய எண்ணமுமே திருமலையைத் தடுத்தன. தானிருக்கும் திரை உலகின் நிலைமைகள் ஒரு வளரும் சிறுவனை என்னென்ன செய்யுமோ என்ற தயக்கமும் உள்ளூற இருந்தது.

ஏற்கெனவே பொன்னுச்சாமி அண்ணன் காலமானபின் வாழ்வின் எல்லா ஒழுக்க நெறிகளையும் கடைப்பிடிக்க இயலாமல் தாறுமாறாகச் சீரழிந்திருந்தான் திருமலை. சென்னை வாசமும் திரையுலகப் புகழும், பணவசதிகளும், மேலும் அவனைச் சீரழித்திருந்தனவே ஒழியப் பண்படுத்த



வில்லை. வீடு, கார், வசதிகள், எதுவுமே அவனை மாற்றி விடவில்லை. மேலும் மோசமாகவே ஆக்கியிருந்தன. எழிலிருப்பையும் அதனோடு தொடர்புடைய தன் நாட்களையும், சம்பவங்களையும் மறக்க முயன்றான் அவன்.

ஆனால், அந்தச் சமயத்தில் தவிர்க்க முடியாதபடி தன் இயக்க மாவட்ட மகாநாடு ஒன்றிற்காக அவன் எழிலிருப்பிற்கே செல்ல நேர்ந்து விட்டது. அவன் இல்லாமல் அந்த மகாநாட்டை நடத்துவதற்கு இயக்க முன்னணித் தலைவர்களே சம்மதிக்கவில்லை. சமூக சீர்திருத்தம், தமிழர் நலம் பேணல் ஆகியவற்றோடு மட்டும் தொடர்புடையதாக இருக்கும் தங்கள் இயக்கம் அவற்றோடு அமையாமல் மற்ற அரசியல் கட்சிகளைப் போலத் தேர்தல்களில் கலந்து கொண்டு ஆட்சியைப் பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் இயக்க ஊழியர்கள் மத்தியில் வலுத்துக் கொண்டிருந்தது. அந்த எழிலிருப்பு மகாநாட்டில் கூட அது பற்றிப் பொதுக் குழு உறுப்பினர் ஒருவர் தீர்மானம் அனுப்பியிருந்தார். ஐயாவின் தலைமையிலிருந்து பிரிந்து வந்த பின்பு படிப்படியாக இயக்க ஊழியர்கள் மத்தியில் தேர்தல் சபலம் தலையெடுத்திருந்தது. பதவிகள் இல்லாமல், கட்சிப் பணியின் பிரதிபலனை அநுபவிக்க வாய்ப்பின்றி வெறும் கலாசார இயக்கமாகவே தொடர்ந்து பத்தியச் சாப்பாடு சாப்பிட்டுக் கொண்டிருக்க ஊழியர்கள் யாரும் தயாராயில்லை. ஆட்சியைப் பிடிக்க வேண்டுமானாலும், சட்டசபையில் எதிர்க்கட்சியாகப் போய் அமர வேண்டுமானாலும் தேர்தலில் நின்று வெற்றி பெற்றாக வேண்டியது அவசியம் என்ற உணர்வு அடிமட்டத்து ஊழியர்களிடம் கூட ஏற்பட்டு விட்டது. எழிலிருப்பு மகாநாட்டுக்கு அவன் போனான். நகரின் டி. பி. யிலிருந்த ஒரே ஓர் ஏ. சி. சூட்டில் தங்கினான் திருமலை. மினிஸ்டர் வந்தால் எந்த நிமிஷமும் காலி செய்து கொடுக்க வேண்டும் என்ற நிபந்தனையோடு தான் அந்த அறையை அவனுக்குத் தந்தான் டிராவலர்ஸ் பங்களாவின் கேர்டேக்கர்.

எழிலிருப்பு ஊர் இப்போது மாறியிருந்தது. நிறைய இடங்களில் அவனுடைய இயக்கக் கொடிகள் தென்பட்டன. ஏற்கெனவே இருந்த நிரந்தர — டூரிங் சினிமாக் கொட்டகைகளைத் தவிர மேலும் இரண்டு மூன்று புதிய சினிமாத் தியேட்டர்கள் உண்டாகியிருந்தன. நிறைய மரங்கள் வெட்டப்பட்டு அந்த இடங்களில் கட்டிடங்கள், அல்லது குடிசைகள் தோன்றியிருந்தன. ஒலி பெருக்கிக் கடைகள் நாலைந்து வந்திருந்தன.

காரிலிருந்து கீழிறங்கி மகாநாட்டு மேடைக்குப் போகிற வழியில் தேரடியில் சண்பகம் பூ விற்றுக் கொண்டிருப்பதைத் திருமலை தன் கண்களாலேயே பார்த்தான். முன்னும் பின்னுமாக மரியாதை பந்தாவுடன் அவனை மேடைக்கு அழைத்துச் சென்ற ஆட்கள் முன்னிலையிலேயே அவனைக் கண்டவுடன் முகத்தைத் திருப்பிக் கொண்டு காரித் துப்பினாள் அவள். அதை அவர்கள் கவனித்தார்களோ இல்லையோ அவன் கவனித்தான். தன் மேல் அவளுக்கு ஏற்பட்ட ஆத்திரம் இன்னும் தணியவில்லை என்று தெரிந்தது. எப்படியாவது யாருக்கும் தெரியாமல் நந்தவனத்துக்கோ, பள்ளிக்கூடத்துக்கோ தேடிச் சென்று தன் பையனைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றியது அவனுக்கு. தானிருக்கும் உயரம், தனது அந்தஸ்து, தனியே நினைத்த நேரத்துக்கு எங்கேயும் தன்னிச்சையாகக் கிளம்பி விட முடியாத நிலை எல்லாமாகச் சேர்ந்து அவனைத் தடுத்து விட்டன. சினிமாப் பிரகாசத்தால் ஊரில் அவனது கவர்ச்சி அதிகமாயிருந்தது. எல்லாரும் அவனை முன்னிலும்


# கோகுலம்

ஜூலை இதழில்...

16 பக்க வண்ணப் படக்கதை



சிவனருட் சுந்தரர்



கதை: ஆனந்தி

சித்திரம்: வினு

கோகுலம், சென்னை-32

மிகுதியாகப் புகழ்ந்தார்கள். முகஸ்துதி செய்தார்கள். ''நமது இயக்கச் செம்மல், தந்தையின் தனயன் அண்ணனின் அருமைத் தம்பி திரு. அவர்கள் மேடையிலிருக்கிறார்கள். நீங்கள் அனைவரும் திரு. அண்ணனின் பேச்சைக் கேட்க ஆவலோடு காத்திருப்பதை நான் அறிவேன்'' — என்றெல்லாம் அடுத்தடுத்த பாராட்டுரைகள் மேடையில் அவன் காதில் விழுந்தன. அவன் கடைசியாகப் பேசுவதற்கு முன்பு பேசிய ஒவ்வொருவரும் தங்கள் பேச்சில் கணிசமான பகுதி அவனைப் புகழ்ந்தனர். 'அண்ணன் தன் சக்தி வாய்ந்த வசனங்கள் மூலம் இன்னும் இரண்டு படம் எடுத்தால் ஆட்சியையே மாற்றிக் காட்டுவோம்' — என்று கூட ஒருவர் பேசினர். திருமலைக்கு உச்சி குளிர்ந்தது. 'அண்ணன் பிறந்த மண்ணில் நடக்கும் இந்த மாநாடு வரலாறு படைக்கப் போகிறது' — என்று தொடங்கிக் கட்சி தேர்தலில் பங்கேற்க வேண்டும் என்ற தீர்மானத்தை முன்மொழிந்து பேசினர் ஒருவர். இதே தீர்மானம் இயக்கத்தின் மாநில மாநாட்டிலும் கொண்டு வரப்படும் என்றும் அவரே கூறினர்.

அன்றைய மாநாட்டின் நிறைவாகத் திரு. பேசிய பேச்சை இருபதாயிரத்துக்கு மேற்பட்டவர்கள் கூடியிருந்து கேட்டு வாக்கியத்துக்கு வாக்கியம் கரகோஷம் செய்தனர். திருமலைக்கு ஆளுயர மாலைகளும், கைத்தறி ஆடைகளும் மலையாகக் குவிந்தன. மாநாட்டில் அவன் தன்னுடைய பேச்சை முடித்த போது இரவு பதினொன்றே கால் மணி. நெருக்கியடித்துக் கொண்டு பேச்சைக்கேட்டார்கள். ஓர் ஆள் கூட இறுதிவரை எழுந்திருக்கவில்லை. மாநாடும், பாராட்டும் கைதட்டலும், தேர்தலில் ஈடுபட வேண்டும் என்ற புதிய தீர்மானமும் தந்த உற்சாகமான கர்வங்கள் சண்பகம் முகத்தைத் திருப்பிக் கொண்டு காரித் துப்பியதை மறக்கச் செய்து விட்டன.

அதே கர்வத்தில் மிதந்தபடி கூட்டத்தை விலக்கி மெதுவாகக் காரைச் செலுத்திக் கொண்டு டி. பி. வாசலில் வந்து இறங்கினல் அங்கே அவனது பெட்டி, படுக்கை முதலிய சாமான்கள் வராந்தாவில் எடுத்து அடுக்கப் பட்டிருந்தன. வாட்ச்மேன் ஓடோடிவந்து, ''சார்! திடீர்னு நம்மூர் மினிஸ்டரே வந்துட்டாரு. வேற வழி இல்லே. உங்க சாமான்கள்ளாம் இதோ இருக்கு... நீங்க வேற இடம் பார்த்துக்க வேண்டியது தான்...'' என்ருன். வந்து தங்கியிருக்கும் மந்திரி உள்பட்டணம் சின்னக் கிருஷ்ண ராஜ உடையார்தான் என்பதும் தெரிந்து விட்டது.

நடுத்தெருவில் யாரோ பகிரங்கமாகத் தன்னை மூக்கை அறுத்து விட்டது போல ஆக்ரோஷமாயிருந்தது திருமலைக்கு.

''என்னடா பெரிய மினிஸ்டர்? நானும் ஒரு நாள் மினிஸ்டராகி இதே மாதிரி இவன் பொட்டி படுக்கையை வராண்டாவிலே தூக்கி எறியாட்டி நான் ஆம்பளை இல்லே'' — என்று வாட்ச்மேனிடம் சவால் விட்டான் அவன்.

(தொடரும்)

## அறுவை ஒரு கப்



● ''ஆட்டோ டிரைவர் குழந்தையை எப்படிக் கொஞ்சுவார்?''
''தூக்கித் தூக்கிப் போட்டு.''

● ''ஓசியில் கிடைக்கிற கார் எது?''
''ஆஸ்கார்.''

● ''எல்லாரும் லீவுக்குப்போயிட்டாங்களே! ஹாஸ்டல் லைஃப் எப்படி இருக்கு?''
''ஹாாாஸ்—டல்லா.''

● ''காலண்டரை ஏன் ஆணியடிச்சு மாட்டறோம்?''
''என்னு காலண்டரை அடிச்சு ஆணியை மாட்ட முடியாதே அதனுல தான்.''

● ''நேத்து பம்பாய்ல கட்டிடமெல்லாம் லேசா ஆடிச்சாம்.''
''யாராவது 'ஆடு பாம்பே'ன்னு பாடியிருப்பாங்க.''

● ''எந்த ரோட்ல அழுக்குப் பட்டா பளிச்சுன்னு தெரியும்?''
''ஒயிட்ஸ் ரோடுல.''

● ''மிகப் பெரிய மிருகம் ஒண்ணு சொல்லு.''
''யானை.''
''இன்னொரு மிகப் பெரிய மிருகம் சொல்லு!''
''இன்னொரு யானை.''

● ''எதுக்காக 'மா'ங்கர எழுத்தை திருப்பிப் போட்டுப் படம் வரைஞ்சிருக்கே?''
அதான் மா—டர்ன்—ஆர்ட்.

● ''என் ஆறுவது தம்பிக்கு அடிக்கடி கோபம் வரும்.''
''அப்ப 'ஆறுவது சினம்'னு சொல்லுங்க.''

-மௌஷ்மி



# ALAS! SO CHEAP!!

இரா. பார்த்திபன்



கடற்கரையில்
25 பைசா
சுண்டலை
இரண்டே விநாடிகளில்
தின்றுவிட்ட
சாதனையுடன்
இல்லை...
வேதனையுடன்
நிமிர்ந்த
என் கண்களில்
தெரிந்தாள்
அவள்
ஜெயராஜின்
ஓவியமே
உயிரெடுத்து
வந்தது போன்று
அந்த
இருபது வயது
இளமையின் வார்ப்பு
விழியால் விடுத்தது
அழைப்பு
ஐந்து விரலைக்
காட்டி
போதும் என்றது.

என் கவனமோ,
காலில் கிடந்த
செருப்பை
நோக்கிச் சென்றது.
கண்ணகி பிறந்த
இம் மண்ணிலே,
கற்பின்விலை
ஐந்து ரூபாய்
ஆனால் என்
கால் செருப்பின்
விலையோ
முப்பது ரூபாய்.
Alas! So Cheap!

இரா. பார்த்திபன்,
(பி. காம்), முதலாண்டு,
8, சாலை வீதி,
புதுவை—3.

படைத்தவன் நாழிக்குப் பூவிட்டு
இனிமையில் பந்தலிட்ட கோலமிது.

காப்பாற்றியவள் விழிகளுக்கு நீரிட்டு
கட்டியவனுடன் செல்லும் நேரமிது.

உடன்பிறந்தோர் நெஞ்சத்தில் தீயிட்டு,
ஊர் தாண்டி உறவாகும் காலமிது.

உறவினர் வாழ்த்தினை ஏந்திட்டு
உள்ளத்தால் குமுறுகின்ற பேதையிது.

மங்கையென்ற பதவிக்கு இரையிட்டு
மருமகளென்ற பட்டம்பெறும் பள்ளியிது.

பழகிய பாசத்திற்கு விடையிட்டு
வேதனையுடன் வரைந்திட்ட கவிதையிது.

—ரெ. விவேக் பி. ஏ.,
உருமு தனலட்சுமி கல்லூரி,
காட்டூர், திருச்சி—19.



# விலைகிடா சொந்தம்

மாணவர் பக்கம்



**மாணவர் பக்கம்**

# ஐந்து லட்சம்

சுமதி ரங்கநாதன்



ஏய் ராதா! இந்தக் கதை பிரமாதமாக இருக்கு... நல்லா எழுதியிருக்கே... இதுக் காகவே நம்ம கையெழுத்துப் பிரதியை ஐந்தில் இருந்து பத்தாக்கிச் சுற்றுக்கு விடப் போறேன்'' சித்ரா குஷியோடு சொல் கிறாள்... அவள்தான் எங்கள் கல்லூரி மாணவிகள் நடத்தும் கையெழுத்துப் பிரதி யின் ஆசிரியர்...

சித்ரா என் கதையைப் பாராட்டியதும் எனக்கு வேறு ஆசை வந்து விட்டது...

என் கதையைப் பிரபலமான வாரப்பத்திரி கைக்கு அனுப்பினால் ஐந்து லட்சம் காப்பி களில் அல்லவா வரும்? எனக்கும் நல்ல பெயர் கிடைக்குமே! போயும் போயும் ஐந்தாறு கையெழுத்துப் பிரதியில் வந்து என்ன பிரயோஜனம்?

நான் கதையைச் சித்ராவிடம் கொடுக்க மறுக்கிறேன்... அவள் ஏமாற்றத்தோடு போய் விட்டாள்...

உடனே அந்தக் கதையைப் பிரபல வாரப் பத்திரிகைக்கு அனுப்புகிறேன்...

இரண்டு வாரம் ஓடியிருக்கும்...

அந்தப் பத்திரிகையில் வேலைபார்க்கும், என் வீட்டுக்கு எதிர் வீட்டில் குடியிருக்கும் சோமு மாமா என் கதை அடுத்த வாரம் பிரசுரம் ஆகப் போவதாக என்னிடம் சொல் கிறார்...

நான் சந்தோஷத்தில் துள்ளிக் குதிக் கிறேன்... என் கதை பிரசுரமாகப் போகும், முதல் கதை அரங்கேற்றம் ஆகப்போகும் செய்தியை எல்லோரிடமும் மகிழ்ச்சியுடன் சொல்கிறேன்...

தூரத்து சொந்தம், கிட்டத்து சொந்தம் எல்லோருக்கும் கடிதம் மூலம் விஷயத்தைத் தெரிவிக்கிறேன்...

அடுத்த வாரம்... அந்தப் பத்திரிகை வருகிறது. ஆவலின் உச்சியில் பத்திரிகையைப் பிரிக்கிறேன்...

என் கதை பிரசுரமாகவில்லை...

எனக்குப் பெரும் ஏமாற்றம்... சோமு மாமாவைத் தேடிப் போகிறேன்.

# ஊமைக் கனவுகள்



● தேவைகளை நிறைவேற்ற ஒரு தொடர் போராட்டம் உருவாகி விட்டால் மனிதன் அலுத்துப் போகிறான். புற உலகம் அவனது நேரத்தைப் பறித்துக் கொண்டால் — கற்பனை உணர்ச்சியோடு புதிய படைப்புக்களை உருவாக்கத் தேவையான மனஉலகப் போராட்டத்தை அவனால் நினைத்துப் பார்க்க முடியாமல் போய் விடுகிறது. அதற்குரிய வல்லமையை வறுமை அவனிடமிருந்து பறித்துக் கொள்கிறது. அடுத்த வேளைச் சாப்பாட்டைப் பற்றிய எச்சரிக்கை ஜீவனுள்ள மனமோகனக் கனவுகளை அப்புறப்படுத்தி விடுகிறது.

● கடுமையாகப் போராடுவதன் மூலமே தன் தேவைகளைப் பெறுவதில் வெற்றி பெறுகிற மனிதன் — அந்த நீண்ட போராட்டத்திற்குப் பிறகு — ஓய்வையே நாடுகிறான். மனத்தின் சிருஷ்டிவேலைகள் வெறும் ஊமைக் கனவுகள் ஆகிவிடுகின்றன. சூழ்நிலை — அவனது சுய சிந்தனைகள் மலர்வதற்கு அனுமதிக்காத போது அவன் மனமொப்பி— தனக்காகச் சிந்திக்கும் பொறுப்பை அடுத்தவர்களிடம் ஒப்படைத்து விடுகிறான் அல்லது வக்கரித்துப்போன பிறருடைய சிந்தனைகளின் இரண்டாந் தர, மூன்றாந்தர ரசிகனாகி விடுகிறான்.

● கருத்துக்களை அலசி ஆராய்வதைக் கூடக் கசப்பான பொறுப்பென்று விலக்கி விட்டு — கண்களை மூடிக் கொண்டு வெறும் நம்பிக்கையின் அடிப்படையில் வாழ்வை ஆளும் சிந்தனைகளைத் தேர்ந்தெடுக்கிறான். இதற்கு மேம்பட்ட தாகங்கள் நெஞ்சில் பரவும் போது— முன்னோர்கள் அளித்துள்ள சூத்திரங்களில் — விடுதலை வேட்கையையும், விழிப்புணர்ச்சியையும் நிறைவு செய்யாத் தொன்று தொட்டு — வழிவழியாக அவர்கள் அளித்துள்ள தாரக மந்திரங்களில் உறுதியான நம்பிக்கை கொண்டு, அவற்றை ஊன்றுகோலாகப் பற்றிக் கொள்ள ஆவேசத்துடன் துடிக்கிறான். ஆகவே அறிவுத் தெளிவும், மனப்பக்குவமும் சமுதாய ஓட்டத்தோடு இணைவதற்கு — வறுமையை முதலில் ஒழிக்க வேண்டும். எந்தத் தத்துவமும் இதைச் செய்த பிறகே பேசப்பட வேண்டும்.

**நா. காமராசன்**

---

அவர் ஊருக்குப் போய் விட்டதாக அவர் வீட்டில் சொல்கிறார்கள்...

சோமு மாமா ஒருவேளை என்னை விளையாட்டாக ஏமாற்றி இருப்பாரோ?

மனத்துக்குள் அப்படி முடிவு செய்கிறேன். எல்லோரிடமும் கதை வரப் போகிறது என்று சொல்லி விட்டு வராமல் போனதால் எனக்கு ஒரே அவமானமாக இருக்கிறது...

வெளியே தலைகாட்ட முடியவில்லை...

நல்லவேளை கல்லூரியும் ஏதோ ஸ்டிரைக் என்று மூடி விட்டார்கள்...

வீட்டிலேயே பொழுதைக் கழிக்கிறேன்.

அடுத்த வாரம்... வேண்டா வெறுப்போடு அந்தப் பத்திரிகையைப் பிரித்துப் படிக்கிறேன்...

முதல் பக்கத்தில் என் பெயரைப்பார்த்து அதிசயப்பட்டு விவரத்தைப் படிக்கிறேன்...

''சென்ற வார இதழில் ராதா எழுதிய ''காலேஜில் கொண்டாட்டம்'' என்ற சிறுகதை பிரசுரமாகி இருந்தது. ஆனால் இந்தச் சிறுகதை அனைத்துப் பிரதிகளிலும் பிரசுரமாகாமல் ஒரே ஒரு இதழில் மட்டும் வந்துள்ளது. அந்த இதழ் கிடைத்த அதிர்ஷ்டசாலி எங்களுக்குத் தெரிவிக்கவும்... ஆயிரம் ரூபாய் பரிசு காத்திருக்கிறது— ஆசிரியர்.''

எனக்குத் தலை சுற்றுகிறது...

''என்னடி ராதா ஐந்து லட்சம் காப்பிகளில் வரணும்னு பேராசைப்பட்டு அனுப்பினியே... பாவம் ஒரே ஒரு காப்பியில் மட்டும் உன் கதை வந்திருக்கு பார்த்தியா? நம்ம கையெழுத்துப் பிரதிக்குக் கொடுத்திருந்தாக் கூட உன் கதை பத்து காப்பியில் வந்திருக்குமே!''

சித்ரா கேலியாகச் சொல்லிச் சிரிப்பதைப் போல் உணர்கிறேன்...

—குமாரி சுமதி ரங்கனாதன்,
மதுரை ஸ்ரீ மீனாட்சி மகளிர் கல்லூரி,
இரண்டாமாண்டு பி. எஸ்ஸி. வேதியியல்,
மதுரை—2.

கார்டூன்
மில்க்
பிஸ்கெட்ஸ்



Cartoon
Milk Biscuits

# சுவை மண்டலத்தில் சுகமான பயணம்!

**கார்ருன் மில்க் பிஸ்கெட்ஸ்**
**சுவையும் ஊட்டமும் நிறைந்த பாலமுதம்.**

சுவைத்துப் பாருங்கள். மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்.







**இந்தியன் ஃபுட்ஸ்**
பிரைவேட் லிமிடெட்
'ரிவர்சைட்', திருப்புவனம் 623611

**கார்ருன் மில்க் பிஸ்கெட்ஸ்—**
**பிஸ்கெட் உலகின் புதிய கவிதை!**

தமிழ் நாடெங்கும் கிடைக்கும். விற்பனையாளர்கள் இல்லாத இடங்களில் விற்பனையாளர்கள் தேவை.

ADWAVE IF 2646

# சொல் ஒன்று வேண்டும்

## 24

தாராவுக்கு இன்று முதல் சின்னதொரு நிம்மதி கிடைத்திருக்கிறது... வீடு தேடித் தேடி அலைந்தவளுக்கு, பல்லாவரத்தின் ஒரு மூலையில், வெகு நாட்களாய்ப் பூட்டிக் கிடந்த தொத்தல் வீடு கிடைத்திருக்கிறது. சுற்றி வர, சுமார் இரண்டு பர்லாங்குக்கு ஏனென்று கேட்க ஒரு நாதி இல்லை.

இங்கிருந்து, தாரா ஆபீசுக்குச் செல்ல வேண்டுமானால், சுமார் அரை மணி நேரத்துக்குக் குறையாமல் வேக வேகமாய் நடந்து, பஸ் பிடித்து, ஸ்டேஷன் போய், அங்கிருந்து மின்சார ரயிலில் பார்க் வரை பயணம் செய்து, பிறகு பார்க் ஸ்டேஷனிலிருந்து பொடி நடையாக அரை மணி நேரம் நடந்து, ஆபீசுக்குள் அடியெடுத்து வைக்க வேண்டும்.

பத்து மணி ஆபீசுக்கு, விடிகாலை ஆறரை மணிக்கே வீட்டை விட்டுக் கிளம்பினால்தான் முடியும். அதேபோல், மாலையில் அலுவலக நேரம் முடிந்து, வீடு திரும்பும்பொழுது இரவு மணி ஒன்பதாகி விடும்...

இப்படி அவள் அலைந்தால் — பாபுவைப் பார்த்துக் கொள்வது யார்...

இந்தப் பொட்டல் வெளியில்...—உணர்வற்ற உடலைக் கட்டிக் காத்துக் கொண்டு, தன்னந்தனியாக உட்கார்ந்திருக்க யார் முன் வருவார்கள்?

முதல் இரண்டு நாட்கள் ஆபீசுக்கு லீவு போட்டாள் தாரா. மூன்றாவது நாள், போயே ஆக வேண்டிய நிர்ப்பந்தம்.

''அரை நாள் வந்துவிட்டுப் போயிடு, தாரா...''

ரமாமணி வேறு திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

அன்று காலையில், மனசே இல்லாமல் தான் கிளம்பினாள் அவள்.

வேறு வழியில்லை. விட்டு விட்டுப்போய்த் தானாக வேண்டும். என்னதான் அலுவலகத்தை விட்டு ஒரு மணிக்குக் கிளம்பினாலும், வீடு வந்து சேர மாலையாகி விடும்.

காலை முதல் — மாலை வரையில், பாபு பட்டினி கிடக்க வேண்டியதுதான்.

அரை மணி நேரம் பொறுக்கச் சொன்னால் கூட, தாம் தூமெனக் குதிப்பவன்— இன்று முழுக்கப் பட்டினி போட்டாலும் ஓர் அதட்டல் கூடப் போட மாட்டான்.

கஞ்சியோ, பாலோ... குழாய் வழியே ஊற்றினாலும் சரி, ஊற்றாவிட்டாலும் சரி தான்...

இன்றைக்கென்று இவனுக்குக் காலன் வந்து விட்டால்... பட்டினி போட்டே புருஷனைக் கொன்று விட்டதாக நினைத்து நினைத்து, அந்த நினைப்பே தாராவைக் கொன்று விடாதோ...

'கடவுளே... அவரை நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும்...'

ஆபீஸிலிருந்து வீடு திரும்பும் வரையில்— தாராவுக்கு இதுதான் ஸ்மரணை.

வீட்டுக்குள் பாபுவை வைத்து, வெளியே பூட்டிக் கொண்டு போக வேண்டிய நிலைமை. பழைய வீட்டிலும் இதே நிலை தான் என்றாலும் — இந்த வீடு அதை விடவும் ரொம்ப மோசம்.

வாசற் கதவுக்குப் பூட்டு வேண்டிய அவசியமே இல்லை. எல்லாமே ஓர் ஒப்புக்குத் தான்.

புழக்கடை வாசலுக்குக் கதவே கிடையாது. இதற்கு முன்பிருந்தவர்கள் — அழகாக இரு கதவுகளையும் தனியே கழற்றி வைத்து விட்டார்கள்.

தாரா, அந்தக் கதவுகளைப் பின் வாசற் பக்கம் மூடினாற் போல் வைத்து, யாரும் கதவைத் திறந்து கொண்டு வந்து விடாதபடி, நாலைந்து தகரப் பெட்டிகளை வைத்துக் கதவுகளுக்கு முட்டுக் கொடுத்திருந்தாள்.

வருபவர்கள் கதவைத் திறந்து கொண்டுதான் வரவேண்டுமென்கிற அவசியமில்லையே! வாய் பிளந்திருந்த ஜன்னல்கள் வழியே வரக் கூடாதா என்ன?...

'வரட்டுமே... வந்து பார்த்து விட்டுப் போகட்டுமே... இங்கிருந்து எடுத்துச் செல்ல என்ன இருக்கிறது... நாலைந்து தட்டு முட்டுச் சாமான்களும், கொஞ்சம் அரிசி, பருப்பும். வேண்டுமானால் திருட வந்தவன்- எதையாவது வைத்து விட்டுப் போனால் உண்டு...

ஆதலால் — ஆள் அரவமில்லாத இடத்தில் வீடு பார்த்து வந்து விட்டதால் கைப் பொருளைப் பறி கொடுத்து விடுவோமோ என்கிற கவலை தாராவுக்கு இல்லை. சரியான கவனிப்பு இல்லாமல் பாபுவின் உயிரைப் பறி கொடுத்து விடுவோமோ என்பதுதான் அவள் தவிப்பு...

அன்று மாலை வீடு திரும்பும்பொழுது, நெஞ்சை ஒரு கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டே வீட்டு வாசற்கதவுப் பூட்டைத் திறந்தவள்...

அதிர்ச்சியில் ஸ்தம்பித்துப் போகிறாள்...

பாபுவின் பக்கத்தில்... யாரது.... ராஜாவா?

அனுராதா ரமணன்

ராஜாவேதான்.

ஒரு முக்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு, முகவாயில் கைவைத்தபடி, அவளையே இமைக்காமல் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிறான் ராஜா.

இவன் எப்பொழுது வந்தான்?

எங்கிருந்து வந்தான்?

அவள் திகைத்து நிற்க, கதவு திறக்கப்படும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்த ராஜா, 'சட்'டெனத் தன் இருக்கையை விட்டு எழுந்திருக்க,

தாராவுக்கு ஒரு வருஷத்துக்கு முன் நடந்த சம்பவம் ஒன்று நினைவுக்கு வருகிறது...

தட்டு நிறைய சோற்றைப் பிசைந்து கொண்டிருந்தவன், வாசற்கதவு தட்டப்படும் ஓசை கேட்டுக் கையை உதறிக்கொண்டு 'விருட்'டென எழுந்து ஓடியவனை... இன்றுதான் மறுபடியும் பார்க்கிறாள் தாரா....

'ஐயோ... எப்படியிருந்தவர் எப்படி ஆகிட்டாரு... எல்லாத்துக்கும் காரணம் நானாகிட்டேனே...'

'இத்தனை நாட்கள் எங்கே இருந்தார்...'

அவள் வாய் திறந்து கேட்கும் முன்பே ராஜா, தலையை அசைத்து அவளை வரவேற்கிறான்.

''வா...''

''நான் இங்கே இருக்கேன்னு எப்படித் தெரியும் ராஜா...''

ராஜா புன்னகைக்கிறான்.

''எனக்கு வேறே வேலை என்ன தாரா... பகல் முழுக்க எங்கேயாவது ஒண்டிக்கிடக்க வேண்டியது. ராத்திரியில எங்கேயாவது அலைஞ்சு திரிஞ்சு, அரை வயித்தை ரொப்ப வேண்டியது...''

தாரா தலைகுனிகிறாள். நெஞ்சுக்குள் அவனது வார்த்தைகள் மரணவலியை உண்டு பண்ணுகிறது...

'பாவம் இவன்... போலீசில் மாட்டினால் தூக்கும், ஆயுள் தண்டனைக்கும் அல்லாடிக் கொண்டிருக்க வேண்டியிருக்கிறது... என்றைக்கு இவனுக்கு நிம்மதியைக் கொடுக்கப் போகிறோம்...'

'ஏன், இந்தக் கணமே போய், போலீசில் நடந்ததைச் சொன்னால் என்ன?'

'இப்பொழுது எப்படி... பாபுவோட உசிரு அவர் உடம்புல இருக்கிற மட்டும்... என்னாலே நடந்ததைச் சொல்ல முடியாதே...'

சிந்தனைகள், திசைக்கொன்றாகப் பறந்தாலும், ராஜாவை வரவேற்கத் தவறவில்லை.

''அன்னிக்குப் பாதிச் சாப்பாட்டுல எழுந்து போனது தான்... அப்புறம் எங்கே, பார்க்கவே முடியலையே... இத்தனை நாட்களும் எங்கே இருந்தீங்க...''



''எங்கேயெல்லாமோ இருந்தாச்சு தாரா. கடைசிக் கடைசியா... நீ இத்தனை நாள் குடியிருந்தியே... அந்த வீட்டுக்கு, ஓடி வந்தேன். கொஞ்சம் அசந்திருந்தாலும்போலீஸ் கையில மாட்டிக்க வேண்டியிருந்திருக்கும்.''

ராஜா, நடந்ததைச் சொல்கிறான்...

தன் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்கிற ஆவலில், அல்லும் பகலும், தன் தந்தையின் வீட்டு வாசலில் நின்றும் நடந்தும் காத்திருந்தது பற்றி...

குழந்தைக்குப் பிறந்த நாள் என்பதை யார் மூலமோ கேள்விப் பட்டவுடன், தேகமெங்கும் புல்லரித்துப் போனது பற்றி.. விழியை மடக்கி, இது விஷயமாகப் பேசியது. பற்றி... திடீரென்று தன்னைப் பார்த்ததில், விழி அகமலர்ந்து நின்றது பற்றி... பிரசவ சமயத்தில் தான் ஆஸ்பத்திரிக்கு வந்து போனதில் கொதித்துப் போன பரந்தாமன் விழியை அடித்ததாகக் கேள்விப் பட்டு, தான் துடித்தது பற்றி... கடைசிக் கடைசியாய்ப் பிறந்தநாளின் பொழுதாவது குழந்தையைப் பார்க்கலாமென மாறுவேடத்தில் தான் போயும் — போலீஸின் பார்வைக்குத் தப்பாமல் அகப்பட்டுக்கொண்டதைப் பற்றி... நல்ல சமயத்தில் விழி, மின்சார இணைப்பைத் துண்டித்திருக்காவிடில் — தான் இத்தனை நேரம் கம்பி எண்ண வேண்டியிருந்திருக்கும் என்பது பற்றி...

கடைசியில் குழந்தையை ஒரு முறைகூடத் தன் கண்ணால் பார்க்க முடியவில்லை என்பதைக் கூறும்பொழுது ராஜா அழுதே விடுகிறான்.

''நான் இருந்த பழைய வீட்டுக்கு எதுக்காக வந்தீங்க...''

''அந்த பராத்துல ஒரு பாதுகாப்பு வேண்டியிருந்தது. ஓடி வந்தேன். ராத்திரி முழுக்க. அங்கேயே பேனருக்குப் பின்னாடி உட்கார்ந்துக்கிட்டிருந்தேன். விடியற நேரத்துல பால் பாக்கெட்டுங்களை எடுத்துட்டு ஒரு பொண்ணு வந்தது.. அவ கிட்ட சாதாரணமாப பேச்சுக் கொடுத்து விசாரிச்சுக்கிட்டேன்... நேரே இங்கே வந்துட்டேன்... நான் வந்ததுல உனக்கு ஏதாவது சிரமமா தாரா...''

''சேச்சே... இந்த மட்டுக்கும் சமயத்துல என் ஞாபகம் வந்ததே... அதுக்கே நான் நன்றி சொல்லணும்...''

''இன்னும் கொஞ்ச நாளைக்கு நான் இங்கேதான் தங்கியிருக்கணும் தாரா... வெளியில போனா மாட்டிக்குவேன்...''

இதைச் சொல்லியபடியே அங்கிருந்த பால் செம்பிலிருந்து, கொஞ்சம் பாலை, எடுத்து, பாபுவின் மூக்கில் செருகியிருந்த ரப்பர் குழாயில் ஊற்றுகிறான்.

''ஆமா. நீ போயிட்டா, இந்த ஆளை யார் பார்த்துக்கறுங்க தாரா...''

''கடவுள்தான்...''

தாரா, இரு கைகளையும், உயர்த்தி வானத்தைக் காட்டுகிறாள்.

''இனிமே நீ கவலைப்படாதே தாரா... நீ ஆபீசுக்குப் போயிட்டு, வர்ற வரைக்கும், இவரை நான் பார்த்துக்கறேன்... சஞ்சீவியோ பாலோ, நான் ஊத்தறேன்...''

தாரா, கண்கள் கலங்க, அவனையே பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

தாராவின் இதயத்தில் ராஜாவின் வார்த்தைகள் அமுதமாக விழுந்த அதே நேரத்தில்—

விழியின் முதுகிலும் இடுப்பிலும் சரமாரியாகப் பரந்தாமனின் பெல்ட் விளையாடிக் கொண்டிருக்கிறது... (தொடரும்)

குருவாயூர் கிருஷ்ணன் கோயிலின் சிறப்புகளில் ஒன்று அங்கு நடத்தப்படும் உதயாஸ்தமன பூஜை. இந்தப் பூஜைக்குபக்தகோடிகளிடம் ஏகப்பட்ட வரவேற்பு. பூஜைக்குரிய கட்டணத்தை இப்போது செலுத்தினால் 1988—ஆம் ஆண்டில் தான் பூஜைசெய்ய முடியும். காரணம் 1987 டிசம்பர் இறுதிநாள் வரையிலான ஆர்டர்கள் ஏற்கெனவே கோயிலுக்கு வந்து குவிந்து விட்டன. இத்தனைக்கும் கோயில் வசூல்செய்யும் குறைந்த பட்சக் கட்டணம் ரூபாய் எட்டாயிரம்!

-க. கண்ணன்





அரசியல்வாதி: ம்ம்... எவனோ, 'ஃப்ரம் அட்ரஸ்' எழுதாம கடிதம் அனுப்பியிருக்கானே!

பலவன்: 'ஃப்ரம் அட்ரஸ்' எழுதியிருந்தா, என்ன செய்திருப்பீங்க?

அரசியல்வாதி: 'ஏண்டா...மடையா 'ஃப்ரம் அட்ரஸ்' எழுதாம கடிதம் போடறே?'ன்னு சூடா பதில் எழுதி விருப்பேன்.

—கே. கே. பலராம்.




# நினைவுகள்

இருட்டில் இருக்கை தேடி, உட்கார்ந்து, நிமிர்ந்தவுடன், கண்ணீர் விடத் தயாராயிருக்க வேண்டும். ஆரம்பக் காட்சிகளில் அத்தனை சோகம்! அத்தனை நெகிழ்வு!

சொத்துக்கு ஆசைப்பட்டு தங்கையையும், தம்பியையும் அறையில் பூட்டிப் பட்டினி போடுகிற கொடுமை அண்ணனாய்த் தேங்காய். ஆசை மனைவியாய் மனோரமா. கடச்கட பூரியைக் கண்ணுக்கு முன்னால் ஆட விட்டு, பசித்த சின்னப் பையனின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிற காட்சியில் நமக்கே 'துணுக்' என்று இருக்கிறது. சமையல் மேடையில் ஏறி, கொதிக்கிற எண்ணெய்ச் சட்டியில், தெரியாத்தனமாய் உட்கார்ந்து அத்தனையையும் மேலே கவிழ்த்துக் கொண்டு பரிதவிக்கிற அந்த பொடியனின் முகபாவங்கள் 'சுரீர்' என்று பதிகிறது. காமிராவின் பின்னிருந்த செல்வத்திற்குத் தனியாய்ப் பாராட்டுக்கள்.

சரியாய் பிளான் செய்யாமல் ஆரம்பித்து விட்ட தொடர்கதை போலக் கதையைத் திருகித் திருகித் திருகி அழைத்துச் செல்வதில், பார்க்கிற நேரத்தில் ஆயாசமில்லா விட்டாலும், பின்னால் நினைவு கூர்கிற மாதிரி எதுவும் அமையவில்லை. அநாவசிய நேரங்களில் நுழைகிற பாடல்கள் காதுக்கு இனிமையாகிப் போனாலும், பார்க்கையில் எரிச்சல் தான் வருகிறது. செவிக்குணவு: சங்கர்–கணேஷ்!

அழுகை, கொஞ்சம் மிடுக்கு, கண்களில் பாசம், வில்லனிடம் கடுமை என்று ஸ்ரீப்ரியாவுக்கு நல்ல தீனி. கலப்பமாய் ஜீரணித்து ரசனையோடு செய்திருக்கிறார். தையாத்தக்கா கார்த்திகும், மெழுகுபொம்மை ராதாவும் கிளுகிளுப்பில்லாத ஒரு காதல் ஸ்டோரியின் நாயகர்கள்.

தமிழ்ப் படத்துக்கேஉரித்தான பதிலில்லாத கேள்விகள் (ஸ்ரீப்ரியாவின்' சொத்து என்னவாயிற்று– வில்லனுக்கு வயது கூடினாலும் அவனுடைய ஜில் ஜில் அஸிஸ்டெண்ட் பெண்ணுக்கு இளமை அப்படியே ஏன் இருக்கிறது – வில்லனோடு ஸ்ரீப்ரியா கண்ணாமூச்சி விளையாடுகிற அவசியம் என்ன – மாதிரி இன்னும் நிறைய) இதிலும் உண்டு. இருந்தாலும் வசனங்களில் சூடான மதர்ப்பு இருக்கிறது. உபயம். ஏ. எல். நாராயணன்.

அடக்கமான குறும்புடன் சரத்பாபுவும், ஆர்ப்பாட்ட ரௌத்ரத்துடன் ஜெயராஜும் குறிப்பிடுகிறமாதிரி செய்திருக்கிறார்கள்.

போன ஜென்ம வாசனை மாறாத தலைப்பானாலும், தொய்வில்லாத படம்.

–ஜெயமன்மதன்





மாலினி சேஷாத்ரி

# தொலைக்காட்சி தொல்லைகள்

"என்னது அப்பா, எங்களுக்கும் சொல்லிவிட்டுச் சிரியுங்களேன்?" என்றான் விவேக்.

"ஒன்றுமில்லை. 'ஆசிரியருக்குக் கடிதங்கள்' பகுதியைப் படித்துக் கொண்டிருந்தேன்!" என்றார் ராஜகோபாலன், மறுபடியும் புன்னகைத்து. "டி. வி. நிகழ்ச்சிகள் ஒன்றுகூடப் பிரயோஜனமில்லையாம். எல்லாவற்றையும் மூடிவிட்டுப் போகச் சொல்கிறார்! முட்டாள்களுக்குத்தான் இந்த டி. வி. நிகழ்ச்சிகள் லாயக்காம்!"

"டி. விக்காரர்கள் இதை நிஜமென்று எடுத்துக் கொண்டு விடக் கூடாது!" என்றாள் ரஞ்சிதா. "அப்புறம் எனக்கு ஒலியும், ஒளியும் கோவிந்தா!"

"அந்த நிகழ்ச்சியைத்தான் ஒழித்துக்கட்ட வேண்டும் என்கிறார் கடிதம் எழுதியவர். அவை இளம்மனங்களைக் கெடுக்கிறதாம். எனக்கும் அவருடன் ஒத்துப்போகத் தோன்றுகிறது."

"ஆமாம்!" என்றான் விவேக் கடுப்புடன். "சதா உங்களுக்கு இந்த இளம் மனங்களைக் கெடுக்கும் சமாசாரங்களைப் பற்றித்தான் கவலை! ஏதோ செய்தித்தாள்கள், பத்திரிகைகள்—ஏன், நாம் தினசரி நேரில் பார்க்கிற நிகழ்ச்சிகள் எல்லாமே ரொம்ப நல்லவை மாதிரியும், இளம் மனங்களை ரொம்—ப உயர்த்திவிடுகிற மாதிரியும் தான் பேச்சு!"

"எனக்கு என்னவோ டி. வி. யில் ஒலியும், ஒளியும் நிகழ்ச்சிகளில் காண்பிக்கும் சில காட்சிகள், பார்க்கச் சற்றுத் தர்ம சங்கடமானவையாகத்தான் இருக்கின்றன. அதிர்ச்சியும் அளிக்கின்றன!" என்றாள் அஞ்சலி.

"உங்கள் தலைமுறைக்கு அப்படித்தான் தர்மசங்கடமாகத் தோன்றும். நீங்கள் அப்படிச் சட்டுப்பெட்டித் தனமாக வளர்க்கப்பட்டவர்கள்!" என்று காட்டமாகச் சொன்னாள் ரஞ்சிதா. "எங்களைப் போன்றவர்கள் பார்க்கிற போது அப்படியொன்றும் தர்மசங்கட நிலையில் இருப்பதில்லை!"

"ஆனால், மொத்தத்தில் எங்களுக்குக் கொஞ்சம் 'போர்' அடிக்கத் தான் செய்கிறது. அதிலும், திரைப் படங்களைத் தவிர ரசிக்கும் படியாய் இருப்பவை வெளிநாட்டுப் படங்களும், நிகழ்ச்சிகளும் தான்!" என்றான் விவேக்.

"வருகிறேன், வருகிறேன்: இதோ, வெளிநாட்டு நிகழ்ச்சிகள் பற்றி இன்னொரு கடிதம்" என்றார் ராஜகோபாலன். ஒரு பெண்மணி எழுதியிருக்கிறார். நம் வாழ்க்கை முறைக்குத் துளியும் சம்பந்தம் இல்லாத வெளிநாட்டுப் படங்களைக் காண்பிப்பதில் என்ன பயன்? நம் கலாச்சாரத்தைப் பிரதிபலிக்கிற டி. வி. படங்களைக் காண்பிக்க வேண்டும் என்கிறார் இந்தப் பெண்மணி!"



"அதுதான் நம்மிடம் நிறையவே இருக்கிறதே!" என்றாள் அஞ்சலி. "சில, கைவினைப் பொருட்கள் பற்றியும், புனித ஸ்தலங்கள் பற்றியும் காண்பிக்கும் தேசிய நிகழ்ச்சிகள் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?"

"தாத்தாக்களும், பாட்டிகளும் தான் அவற்றைப் பார்ப்பார்கள்!" என்றான் விவேக், கிண்டலாக. "நமக்கு உடனடித் தேவை இரண்டாவது சானல், விளம்பரங்கள் ஒளிபரப்பாகும் கமர்ஷியல் சானல்!"

"அப்புறம் இந்த வீட்டில் சதா சினிமா படங்களைப் பற்றியும், சினிமா நட்சத்திரங்களைப் பற்றியும் தான் பேச்சாயிருக்கும்!" என்றார் ராஜகோபாலன் வெறுப்புடன்.

"அதுதான் தப்பு!" என்றாள் ரஞ்சிதா. "என் தோழி அஞ்சு, அமெரிக்காவில் அவள் அத்தை வீட்டுக்குப் போயிருந்தாள் விடுமுறைக்கு. கமர்ஷியல் டி. வி.யில் பலவித நிகழ்ச்சிகள் காண்பிக்கிறார்களாம் அங்கே... விஞ்ஞான நிகழ்ச்சிகள், கல்வி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள்..."

"அப்படிச் சொல்லாதே, என் ஆசைமகளே!" என்றார் ராஜகோபாலன் கிண்டலாக. "அன்றைக்கு டி.வி.யில் ஒரு பிரமாதமான விஞ்ஞான நிகழ்ச்சி காண்பித்தார்கள். உன்னைப் பார் என்றேன். சாக்குப் போக்குச் சொல்லிவிட்டு, பார்க்காமல், நழுவிப் போனவள்தானே நீ?"

சகோதரியைக் காக்கும் முயற்சியில் விவேக் உடனே, "அப்பா, ஒரு செய்தி வந்ததே. முன்பு, தினசரி பன்னிரண்டு மணி நேரம்

டீ. வி. நிகழ்ச்சி பார்க்கலாம் என்று? எல்லோரும் பள்ளி, கல்லூரி, ஆபீசு என்று வெளியே போயிருக்கிற போது, அப்படிக் காண பித்துஎன்ன பிரயோசனம்?''

''என்னைப் போன்றவர்களை மறந்து விடுகிறாய் நீ!'' என்றாள் அஞ்சலி. ''டீ. வியைச் சமையலறைக்குக் கொண்டு போய் வைத்துச் சமைத்துக் கொண்டே டீ. வி.யைப் பார்ப்பேன், இல்லையா?''

''எங்களைப் போன்ற இளையவர்களை நிகழ்ச்சிகள் தயாரிக்கச் சொல்ல வேண்டும்!'' என்றாள் ரஞ்சிதா. ''அப்போது தான் புதிய புதிய கருத்துக்களையும், புதிய திறமைகளையும் வெளிக் கொண்டு வர முடியும். எத்தனை நாள் பழைய பன்னுகளையே பார்க்க முடியும்?''

''எல்லோரையும் திருப்தி படுத்துவது அப்படி ஒன்றும் எளிது அல்ல!'' என்றார் ராஜகோபாலன். ''நகரத்தில் இருப்பவர்கள் கிராமிய நிகழ்ச்சிகளை 'போர்' என்கிறார்கள். சீரியஸ் போக்கு உள்ள புத்திசாலிகள் மட்டமான நிகழ்ச்சிகளைக் குறை சொல்கிறார்கள். 'சுதேசிகள்' இந்திய நிகழ்ச்சிகளே வேண்டும் என்கிறார்கள். பொழுது போக்கு அம்சங்களைக் கொடுத்தால், அறிவூட்டும் நிகழ்ச்சிகளைக் கேட்பார்கள். அறிவூட்டும் நிகழ்ச்சிகளைக் காண்பித்தால், பொழுது போக்கு அம்சங்களைக் கேட்பார்கள். இரண்டையும் கலந்து கொடுத்தால், சில நாட்கள்




வருகிற டீ. வி. நாடகங்கள் மாதிரி ஒரே உபதேச அறுவை. பேசாமல் 'ஆசிரியருக்குக் கடிதம்' எழுதியவர் சொல்லுகிற மாதிரி, இழுத்து மூடிவிட்டுப் போகலாம் இவர்கள்!''

''இல்லையென்றால் நமது டீ. வியை யாருக்காவது விற்றுவிடலாம்!'' என்றாள் அஞ்சலி.

''நீங்கள் இரண்டு பேரும் விவாதித்துக்கொண்டிருங்கள்!'' என்றாள் ரஞ்சிதா. ''விவேக், நீ வா. ஒளியும் ஒலியும் ஆரம்பிக்கப் போகிறது!''

---



# யார் நீ? யார் நீ?

கவிஞர். முத்துராமலிங்கம்

அடே!...
அடிக்கடி என்னுள்
எட்டிப் பார்க்கும்
நீ யார்...?

அன்னியனா...?
உறவினனா...?

அன்னியப்படும்
உறவினன்...!

விரோதியா...?
நண்பனா...?

விரோதப்படும்
நண்பன்...!

நீ
கறுப்பா...?
வெள்ளையா...?

நிறங்களுக்கு
அப்பாலான
நிர்மலன்!

உன்
குணமென்ன?

நிறையும்
குறையுமற்ற
நிர்குணன்!

எனின்,
ஆண்டவனா நீ...?

உன்னை ஆள்பவன்...!

நீ
அரியா...? அரனா...?
அல்லாவா...? ஏசுவா...?

எல்லாமுமாய்
உன்னுள் இருக்கும்
ஏகப் பிரம்மம்!

என்ன பேத்தல்...?
உன் பெயர் தான்
என்ன...?

மனச்சாட்சி!

என்ன...?
மனச்சாட்சியா...?
வந்தாயா...! வந்தாயா...
வாய்த்தாய் வசமாய்! !

இத்தனை நாளும்
உன்னை நான்
கொல்லாமல்
விட்டதால் தான்
இந்தக்
கொலைகாரச் சமூகம்
என்னைக்
கொல்லாமல்
கொன்று வருகிறது...!

இதோ!...
உன் மார்பைப்
பிளந்து கொல்வேன்!
மாலைகள் என்
மார்பில் ஊஞ்சலிடும்!
மகுடமும் நாடிவரும்!

இதுவரை
உன்னைத்
தூக்குமரம்
தொங்கவிடாததால்
நான்
சிலுவை மரம்
சுமந்தேன்,
இப்போதே பார்
உன்னை நான்
கழுமரத்தில்
ஏற்றிக் கொன்று
சிவிகை மரமேறிச்
செகமெலாம்
வலம் வருவேன்!

## விசேஷ பரிசுகளுடன்

# டெபாசிட் சேகரிப்பு விழா!

## (15-3-1984 முதல் 14-7-1984 வரை)

**22%** வட்டி வழங்கப்படுவதுடன்
**V. I. P. BRIEF CASE**
அன்பளிப்பும் வழங்கப்படும்.

மற்றும் மேற்படி காலத்தில் டெபாசிட் செய்பவர்கள் ஒவ்வொருவரும் விசேஷ பரிசு போட்டியில் கலந்துகொள்ளும் வாய்ப்பை பெறுவார்கள். சென்னை கிளையில் டெபாசிட்தாரர்கள் முன்னிலையில் நடைபெறும் பரிசு போட்டியில் வெற்றி பெறுபவர்களுக்கு

முதல் பரிசு
**கலர் TV**
(அல்லது ரூ. 10,000/- ரொக்கம்)



இரண்டாவது பரிசு
**குளிர் சாதனப் பெட்டி**
(அல்லது ரூ. 5000/- ரொக்கம்)



மூன்றாவது பரிசு
**வாஷிங் மெஷின்**
(அல்லது ரூ. 4000/- ரொக்கம்)



நான்காவது பரிசு
**பிளாக் & ஒயிட் TV**
(அல்லது ரூ. 3000/- ரொக்கம்)



**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன**

| 1-வருடம் | 2-வருடங்கள் | 3-வருடங்கள் | 5-வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 22% |



## பாலாஜி மோட்டார் & ஜெனரல் பைனான்ஸ்

(Hire Purchase Financiers for Motor Vehicles)

சென்னை : 91, உஸ்மான் ரோடு (சிவா-விஷ்ணு கோவில் அருகில்)
தி. நகர், சென்னை-600 017 போன் : 447186, 442216

பெங்களூர் : 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்)
மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003 போன் : 366971

திருச்சி : 22, மதுரை ரோடு (முதல் மாடி) திருச்சிராப்பள்ளி-620 008

பாண்டிச்சேரி : 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) பாண்டிச்சேரி-605 001

தஞ்சாவூர் : எண் : 2 & 3, முதல் மாடி, ஜி. ஏ. கனால் ரோடு,
தஞ்சாவூர்-613001 போன் : 1626

திருவண்ணாமலை : 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன் : 483

பட்டுக்கோட்டை : 9-A, தலையாரி தெரு, பட்டுக்கோட்டை-614 601 போன் : 453

---

**டெபாசிட்தாரர்களை அறிமுகம் செய்பவர்களுக்கும் அன்பளிப்பு வழங்கப்படும்.**

## வட்டமேஜை

● லாரி, கார் ஓட்டும் நபர்கள் ஏனோ தெரியவில்லை. முன்புற விளக்குகளில் இரண்டில் ஒன்றை அணைத்து விட்டு, மற்றொன்றை மட்டும் போட்டுக்கொண்டு இரவில் ஓட்டுகிறார்கள். எதிரே வருபவர் அவ்வண்டிகளை மோட்டார் பைக், ஸ்கூட்டர் எனத் தவறாக எண்ணிவிட விபத்துக்கள் நிகழ்வதற்கான சாத்தியக் கூறுகள் அதிகரிக்கின்றன.
சென்னை—24,
ஜி. சீனிவாசன்.

● இருங்காட்டுக்கோட்டை எனும் சிறிய கிராமம் சிலிர்த்து எழுந்த விந்தை, அதன் புதிய உத்வேகம் படிப்பவர்கள் மெய் சிலிர்க்கவே வைக்கிறது.
தஞ்சாவூர்—9
திருமதி. விஜயா குருநாதன்

● கிரிக்கெட் விளையாட்டு வீரர் டி. ஏ. சேகரும், பத்திரிகையாசிரியர் லேனா தமிழ்வாணனும் சந்தித்து... மனம் விட்டுப் பேசியமை.. என் மனத்தைக் கவர்ந்தது. வெவ்வேறு துறைகளில் சிறந்து விளங்குபவர்களை ஒவ்வொரு வாரமும் சந்திக்க வையுங்கள். இதனால் எங்களுக்கும் புதுப் புது செய்திகள் கிடைக்குமே! 'சந்திப்பு' தொடரட்டும்!
குளச்சல்
எம். எம். இப்ராஹீம்.

● பொன்னையன் உதிர்த்த பொன்மொழிகள் உண்மையில் நடந்தால் கட்டாயம் தமிழக வரலாற்றில் பொன்னேட்டில் என்ன பிளாட்டின ஏட்டிலேயே பொறித்திடலாம்.
ஈரோடு—11.
பூவை. இராஜபாரதி.

● புத்தகம் படித்தபடியே சாப்பிடும் பழக்கமுடையவன் நான். 'சமையலறைச் சிரிப்பு'களை அனுபவித்துப் படித்தபடியே சாப்பிட்டதால் ஏகமாகப் புரையேறி பலமுறை தலையில் பலமாகத் தட்டும்படி ஆயிற்று!
சென்னை—35, சி. பூபால்சிங்

● குழந்தைகள் நோயும் மருத்துவமும் பற்றிய யோசனைகள் இளம் தாய்மார்களுக்கு மிகவும் பயன் உள்ளதாய் அமைந்தது.
குடியாத்தம்—2,
கே. கே. இராமகிருஷ்ணன்.

● 7.6.84 இரவு வானொலியில் 'நேரம் நல்ல நேரம்' கேட்டு ரசித்தேன்.
மரபுக் கவிதைகளுக்குப் பயிற்சியும், முயற்சியும் இருந்தால் மட்டும் போதும் நல்ல கவிதை பிறந்துவிடும் என்றும் புதுக் கவிதைக்குச் சிந்தனை வேண்டும் என்றும் கூறியதை நான் மறுக்கிறேன்.
வெறும் பயிற்சியும் முயற்சியும் இருந்தால் நல்ல மரபுக் கவிதைகளைக் கவிஞன் படைக்க முடியாது. சீரிய சிந்தனையில் தெளிவு பெற்ற கற்பனையும் இருக்க வேண்டும். அப்படி இருந்தால்தான் கால வெள்ளத்தாலும் அடித்துச் செல்லப்படாத சிரஞ்சீவிக்கவிதைகளாக அவை நிற்க முடியும்.
சென்னை,
குடந்தை புகழேந்தி.

> விடை:
> விக்ஸ், ரஸ்னா,
> கார்லிக் பர்ல்ஸ்,
> ஹார்லிக்ஸ்.

● இலவச கண் சிகிச்சை முகாம் ஏழை எளியோருக்கு நல்ல வரப்பிரசாதம் தான். ஆனால் இந்த இலவச கண் சிகிச்சை முகாமில் அலட்சிய மனப்பான்மையோடும் இருக்கிறார்கள் என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டும். ஒருவருக்கு வலது கண் மட்டும் ஆபரேஷன் செய்யப்படுகிறது. அவருக்குக் கண்ணாடி கொடுக்கும் பொழுது ஆபரேஷன் கிளாசை (Lens) இடது பக்கத்தில் மாட்டி (fit) விடுகிறார்கள். அதாவது வலது இடமாகவும், இடது வலமாகவும் மாற்றி மாட்டி விடுகிறார்கள். இது போன்ற தவறுகள் இப்பொழுது அதிகரித்துள்ளன.
ராமநாதபுரம்,
எஸ். முகம்மது யூசுப்.

● சரித்திர நாயகன் பட விமரிசனத்தில்... சிவாஜியும், சாரதாவும் கருத்துத் தெரிவிப்பது போல் எழுதியிருந்த பாணி ரசிக்கும்படி இருந்தது.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

● அரசு அலுவலகங்களில் பல இடங்களில், கவனிப்பாரற்று மின்சார விசிறிகள் சுற்றிக் கொண்டிருக்கின்றன. அலுவலர்கள் மேலதிகாரியைப் பார்க்கப் போனாலோ, உணவு இடைவேளையின் போதோ, மின்சார விசிறிகளை நிறுத்தி விட்டுச் செல்லக்கூடாதா? சென்ற வாரம் தபால் அலுவலகம் ஒன்றில் ஒன்பது விசிறிகள் ஆளில்லாத இடத்தில் சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டேன். மின்சாரப் பற்றாக்குறைநாளில் அரசு அலுவலர்கள் பொறுப்புடன் நடந்து கொண்டால் நாட்டுக்கும் அவர்களுக்கும் நல்லது.
கும்பகோணம்,
டி. எஸ். சீதாராமன்

கடைசி கடிதம் பரிசு பெறுகிறது.

# ஒற்றைக்கண் எமன்கள்

வாழ்க்கை வரலாறு

# இன்க்ரிட் பெர்க்மனின் என் கதை

நேருஜியிடம் தன் கணவர் சார்பில் உதவி கோரினார் உலகப் புகழ்பெற்ற திரைப்பட நட்சத்திரம் இன்கிரிட் பெர்க்மன். பிரபல எழுத்தாளர் ஆலன் பர்ஜஸ் உதவியுடன் அவர் எழுதிய சுயசரிதையைச் சுருக்கித் தமிழாக்கம் செய்து அளிப்பவர் அசோகமித்திரன்

இருபது ஆண்டுகளாகச் சொல்லி வந்ததைத்தான் அன்றும் சொன்னேன்: ''நான் சுயசரிதம் எழுத மாட்டேன்.''



டெலிபோனைக் கீழே வைத்த என்னை ராபர்டினோ கவலையோடு பார்த்தான். ''அம்மா'' என்றான், ''நீ மறைந்த பிறகு எவ்வளவு பேர் அவர்கள் அரையும் குறையுமாக அறிந்துள்ள வம்பு வதந்திகளை வைத்து உன்னைக் குத்திக் குதறிப் போட்டப் போகிறார்கள், தெரியுமா? உன் குழந்தைகளாயிருந்தும் எங்களால் உன்னைப் பாதுகாக்க முடியாது. ஏனென்றால் எங்களுக்கே அரையும் குறையுமாகத்தான் தெரியும். நீ மட்டும் நடந்தது எல்லாவற்றையும் குறித்து வைத்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!''

இது என்னை வெகுநேரம் சிந்திக்க வைத்தது. என் செல்வங்களே — பியா, ராபர்டினோ, இஸபெல்லா, இன்கிரிட்! இதோ நடந்தது நடந்தபடியே.

அவர்கள் சினிமாக் கொட்டகையை விட்டு வெளியே வந்தார்கள். ஹாலிவுட்டுக்கு வழக்கமான மாலை மென் காற்று வீசிக் கொண்டிருந்தது. அவள் மனம் இன்னும் பிரமிப்பில் ஆழ்ந்திருந்தது. கணவன் கையைப் பிடித்துச் சொன்னாள்: ''பீட்டர், நாம் எப்படியும் இந்த டைரக்டரைப் பற்றிய விவரம் எல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு திரைப் படத்தில் இவ்வளவு சாதிக்கக் கூடுமானால் அவன் சாதாரண மனிதனல்ல.''

அந்தச் சினிமா சுவரொட்டியில் 'இசை: ரோஸலினி' என்றும் ஒரு வரி இருந்தது. ''அடேயப்பா! இந்தப் படத்தின் இசையைக் கூடவா அவனே சிருஷ்டித்திருக்கிறான்!'' என்றாள்.

இத்தாலியில் தயாரிக்கப்பட்ட 'ரோம்-திறந்த நகரம்' என்ற அந்தப் படம் அந்தக் கணம் இன்கிரிட் பெர்க்மனின் வாழ்க்கையை மாற்றிவிட்டது. அந்தப் படத்தின் டைரக்டர் ராபர்டோ ரோஸலினியின் வாழ்க்கையை மாற்றிவிட்டது. இன்கிரிடின் கணவன் டாக்டர் பீட்டர் லிண்ட்ஸ்டாமின் வாழ்க்கையை மாற்றிவிட்டது. மூன்று புது ஜீவன்கள் உலகத்தில் உதிக்க ஏதுவாயிற்று.

என்னுடைய மூன்றாவது வயதில் இறந்துவிட்ட அம்மாவும், என் பதிமூன்றாவது வயதில் இறந்து போன தந்தையும் மறுப்புக் கூறாமல் இருந்திருக்கலாம். ஆனால் என்னை வளர்த்து வந்த பெரியப்பா சீறினார்: ''நடிக்கப் போவதா? இதோ பாரடி, பெண்ணே! நடிகைகளுக்கும் வேசிகளுக்கும் வித்தியாசம் கிடையாது. அவர்கள் மேடையிலும் திரையிலும் நடிக்கும் காதல் காட்சிகள்





பிற நேரங்களிலும் நடிக்காது என்று யாரால் கூற முடியும்?'' ஆனால் அவரே ஒருநாள்: ''சரி, சரி, ராயல் நாடக அகாடமியில் சேர்ந்து கொள். ஆனால் நுழைவுப் பரீட்சை உண்டு. அதில் உன்னை அவர்கள் நிராகரித்து விட்டால் அப்புறம் நடிப்பு, நாடகம் என்று மூச்சு விடக் கூடாது.''

நுழைவுப் பரீட்சையில் ஒரு காட்சி நடித்துக் காட்ட வேண்டும். நான் ஒரு கிராமத்துப் பெண். அவளுடைய நண்பனோடு விளையாடுவது போன்ற காட்சிக்காகத் தாவிக் குதித்து மேடையில் பிரவேசித்தேன். தேர்வு செய்கிறவர்கள் உடனே, ''போதும், போதும், அடுத்த நபர்'' என்றார்கள்.

எனக்கு அழுகை பொங்கிக் கொண்டு வந்தது. ராயல் அகாடமியிலிருந்து வெளியே ஓடினேன். வழியில் பாலத்துக் கைப்பிடிச் சுவர் மீது சாய்ந்து ஆற்று நீரை உற்றுப் பார்த்தேன். எனக்கு நிரந்தர ஆறுதலளிக்கக் கூடிய அந்தக் காட்சி கூட அன்று என்னைச் சமாதானப்படுத்தவில்லை.

வீடு திரும்பியதும் தான் செய்தி தெரிந்தது. என்னை அகாடமியில் தேர்ந்தெடுத்து விட்டார்கள்! பல ஆண்டுகள் கழித்து, நான் பேரும் புகழும் பெற்ற நடிகையான பிறகு அவர்களைக் கேட்டேன்: ''அன்று ஏன் என்னிடம் அவ்வளவு அலட்சியமாக இருந்தீர்கள்?''

''அலட்சியமா? நீ மேடைக்கு வந்த கணமே உன்னைச் சேர்த்துக் கொள்வது என்று முடிவு செய்து விட்டோம். இவ்வளவு இயல்பான திறமையுள்ள உன்னைப் பரீட்சித்து ஏன் நேரத்தை வீணாக்கவேண்டும்?''

• • •

**ப**தினெட்டு வயதில் என்னையொத்த பிற பெண்களைப் போல் நான் இளைஞர்களிடம் செல்வாக்குப் பெறவில்லை. அவர்கள் ஜோடி ஜோடியாக நடனத்திற்குப் போனார்கள். எனக்குத் தனிமையும் நாடக அகாடமியும் போக்கிடமாயின.

நான் ஒரு தோல்வி என்று எண்ணிக் கொண்டிருந்த நாளில் தான் உறவினர் ஏற்பாடு செய்திருந்த ஒரு சிறு விருந்தில் பீட்டர் லிண்ட்ஸ்டாமைச் சந்தித்தேன். பல் வைத்தியத் துறையில் இருந்தார். இருபத்தைந்தே வயது ஆன அவர் என்னைச் சந்தித்ததும் சொன்னது: ''உன் தலை மயிர் மிகவும் நன்றாக இருக்கிறது.''

சில நாட்கள் கழிந்து அவர் மீண்டும் என்னைச் சந்திக்க விரும்புவதாகத் தெரிவித்தார். என் பெரியப்பா, அத்தை முதலானோருக்குச் சம்மதம். பீட்டர் ஒழுங்கானவர், வைத்தியத் துறையில் முன்னேறக் கூடியவர். நான்காண்டுகள் கழித்து எங்கள் திருமணம் நடந்தது.

ராயல் நாடக அகாடமியில் சேர்ந்த மூன்றே மாதங்களுக்குள் அகாடமியின் விதிமுறைகளையும் மீறி ஒரு டைரக்டர் இன்கிரிட் பெர்க்மனுக்கு ஒரு நாடகத்தில் முக்கிய பாத்திரம் அளிக்க முன்வந்தார். ஆண்டுக் கணக்கில் அகாடமியில் பயின்று வந்தும் இன்னும் மேடையேறாத மாணவிகள் மனம் புழுங்கினர். அவதூறுகள் பரப்பினர். ஒரு முறை ஒரு பெண் இன்கிரிடைக் கீழே தள்ளி உதைக்க இன்னொருத்தி இன்கிரிட் தலையை மாறி மாறிக் குத்தினாள். இன்கிரிட்டின் அரங்கேற்றம் காலவரையறையின்றி ஒத்திப் போடப்பட்டது.

நாடகப் பயிற்சி ஓராண்டு முடிவதற்குள் இன்கிரிட் பிடிவாதம் பிடித்து ஸ்வீடிஷ் சினிமாவில் நடிக்கச் சென்றாள். இருபதாவது வயதில் அவள் நடித்த 'இண்டர் மெஜோ' ரசிகர்கள் விமரிசகர்கள் எல்லோருடைய பாராட்டையும் பெற்றது.

• • •

**நி**ச்சயதார்த்தம் முடிந்து ஏழாம் மாதம் ஏழாம் தேதியன்று மணம் புரிந்து கொள்ளலாம் என்று நினைத்திருந்தேன். ஆனால் அன்று நான் நடித்து வந்த படம் முடியவில்லை. இறுதியில் ஜூலை 10, 1937 அன்று ஆதரான் சர்ச்சில் எங்கள் திருமணம் நடந்தது.

சர்ச்சிலிருந்து பீட்டர் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். எங்களைப் புகைப்படம் எடுத்துக் கட்டுரை எழுத வந்த சினிமாப் பத்திரிகை நிருபர் ஒருத்தி மீது பீட்டர் பாய்ந்தான். அவன் அப்பாதான் அவனைச் சமாதானப் படுத்தினார். நாங்கள் ஸ்டாக்ஹோம் நகரில் ஒரு சிறு வீட்டில் குடிபோனோம். பீட்டர்மேற் கொண்டு டாக்டர் பட்டப் படிப்புக்குப் படித்து வந்தான். நான் திரைப்பட நடிகையாகத் தொடர்ந்து பணியாற்றினேன். குழந்தை பிறக்கப் போகிறது என்று தெரிந்த போது கூட என் திரைப்பட வாழ்க்கையை



முடித்து விட வேண்டும் என்று எனக்குத் தோன்றவில்லை.

அப்போதுதான் பெரிய வாய்ப்பாக பெர்லின் யூஃபா ஸ்டுடியோவிலிருந்து அழைப்பு வந்தது.

அன்று ஜெர்மனி முழுதும் ஹிட்லர் வெறியில் மூழ்கியிருந்தது.

இன்கிரிட் நடிக்க அழைக்கப்பட்ட படத்தின் டைரக்டர் கார்ல் பிராலிக். ஒரு நாஜி பேரணிக்கு அழைத்துச் சென்றார். எல்லோரும் ஹிட்லருக்கு 'ஸல்யூட்' செய்தார்கள். இன்கிரிட் மட்டும் அப்படிச் செய்ய மறுத்து விட்டாள். ''இது வேடிக்கை அல்ல. நம்மை யாராவது கண்காணித்துக் கொண்டே இருப்பார்கள்'' என்று கார்ல் பயந்தபடியே கூறினார். அத்துடன் ''டாக்டர் கோயபல்ஸ் உன்னை ஏதாவது விருந்துக்கு அழைக்கக்கூடும். முடியாது என்று சொல்லி விடாதே. அவருக்கு நடிகைகள் என்றால் மிகவும் விருப்பம்'' என்றார்.

''யார் கோயபல்ஸ்? இந்த நாட்டுப் பிரச்சார மந்திரியா? நான் யார் விருந்துக்கும் போகத் தயார் இல்லை.''

கார்லுக்குப் பயம் பிடித்துக் கொண்டு விட்டது. இல்லை, முடியாது என்ற சொற்களுக்குக் கோயபல்ஸ் பழக்கப்பட்டவரல்ல. திடீர் திடீரென்று நிறையப்பேர் காணாமல் போய்க் கொண்டிருந்தார்கள். காவல் முகாம்கள் பற்றியும் பேச்சு உலவியது. மேற்பூச்சான உற்சாகத்துக்கு அடியில் எல்லோரிடமும் இனிலும் பய உணர்ச்சியும் கூடவே நிழலாடின.

பிரசவ காலம் நெருங்க நெருங்க இன்கிரிட்டின் உடுப்புக்கள் தையல் தெறிக்க ஆரம்பித்தன. அவளுடைய படம் அவசரமாக முடிக்கப்பட்டது. கார்ல் அவ்வளவு பயந்திருக்க வேண்டியதில்லை. கோயபல்ஸின் கண்ணில் இன்கிரிட் படவில்லை. யூஃபா கம்பெனிப்படம் முடிந்து இன்கிரிட்டை அவளுடைய கணவன் ஒரு சிறு காரில் ஐரோப்பிய உல்லாசப் பயணத்துக்கு அழைத்துப் போன போது அவள் எட்டு மாத கர்ப்பம். பிரசவத்திற்கு ஸ்வீடன் போய் விட்டார்கள். ''இப்படி முட்டாள்தனமாகக் குழந்தை பெற்றுக் கொண்டாயே, உன் உடல் கட்டு போயே போய்விட்டது. ஒரு அம்மாவைக் கதாநாயகியாகப்போட எந்தத் திரைப்படத் தயாரிப்பாளருக்குத் தைரியம் இருக்கும்!'' இப்படி நிறையப் பேர் சொன்னார்கள். ஆனால் முதல் பெண் பியா பிறந்த போது தான் இன்கிரிட் நடித்த 'இன்டர் மெஜோ' ஹாலிவுட் சென்றடைந்தது. அதுவே இன்கிரிட் ஹாலிவுட் நட்சத்திரமாக வழி செய்தது.

• • •

நான் ஹாலிவுட் சென்றடைந்த கணத்திலிருந்து ''எங்கே மிஸ்டர் டேவிட் செல்ஸ்னிக்?'' என்று கேட்டுக் கொண்டிருந்தேன். சங்காளுத தூரத்திலிருந்து என்னை அழைத்துத் தருவித்தபின் என்னை அவர் இன்னும் பார்க்க வரவில்லை. கடைசியாக மிரியம் ஹாப்கின்ஸ் என்ற நடிகை வீட்டில் எங்கள் சந்திப்பு நடந்தது. நான் அறையுள் நுழைந்தவுடனேயே என் உயரத்தைக் கண்டு அதிர்ச்சியுற்றவராக, ''அடக் கடவுளே! உன் காலணியைக் கழற்று!'' என்றார்.

''அதனால் பிரயோசனமிராது.'' என்றேன்.

''முதலில் உன் பெயரை மாற்ற வேண்டும். உச்சரிப்பதற்குக் கஷ்டமாயிருக்கிறதுடன் ஜெர்மன் பெயர் போலவும் இருக்கிறது. உன் கணவன் பெயர் பரவாயில்லை. லிண்ட்ஸ்டாம். இங்கே சார்லஸ் லிண்ட்பெர்க் என்ற விமானியை எல்லாருக்கும் பிடிக்கும். உன் பெயரைக் கூட லிண்டி என்று வைத்து விடலாம்...''

''மிஸ்டர் செல்ஸ்னிக்! எனக்கு யாருடைய பெயரும் வேண்டியதில்லை. உச்சரிப்பதற்குக் கஷ்டமாயிருந்தால் எல்லோரும் சிறிது பயிற்சி எடுத்துக் கொள்ளட்டும்.''

''சரி, அதைப் பிற்பாடு கவனித்துக் கொள்வோம். உன் புருவம் மிகவும் தடிமனாக இருக்கிறது. அதைச் சரி செய்ய வேண்டும். அப்புறம் உன் மேக்கப்....''

''இதோ பாருங்கள், மிஸ்டர் செல்ஸ்னிக். இந்த மாதிரி எல்லாம் உங்கள் எண்ணம் இருந்தால் முதலில் என்னை இங்கு தருவித்திருக்கக் கூடாது. நான் எதையும் மாற்றத்



தயாராக இல்லாததால் அடுத்த வண்டியில் ஊர் போய்ச் சேர்கிறேன்.''

அவர் மறுபடியும் பத்திரிகைக்காரர்கள், விளம்பரம் என்று பேச ஆரம்பித்தார். ''விளம்பரம் ஒன்றும் வேண்டாம், மிஸ்டர் செல்ஸ்னிக். அது என் வழியல்ல'' என்று கடுமையாகச் சொன்னேன்.

அவர் சாப்பிடுவதை நிறுத்திவிட்டு என்னையே முறைத்துப் பார்த்தார்.

• • • •

ஸ்வீடிஷ் மொழியில் தயாரிக்கப்பட்ட 'இன்டர்மெஜோ' மீண்டும் ஒரு முறை ஆங்கிலத்தில் எடுக்கப்பட்டது. இதுவே இன்கிரிட் பெர்க்மெனின் முதல் ஹாலிவுட் படமாயிற்று. அதைத் தொடர்ந்து இன்கிரிட் பெர்க்மன் 'ஜோன் ஆஃப் ஆர்க்' படத்தில் நடிப்பார் என்ற அறிவிப்பு வந்தது. ஆனால் அறிவித்தபடி 1939—ல் அப்படம் எடுக்கப்படவில்லை. யுத்தம் ஆரம்பித்து விட்டது. இங்கிலாந்தும், பிரான்சும் சேர்ந்து ஜெர்மனியோடு போரிடும் வேளையில் இங்கிலாந்து, பிரான்சு இரு நாடுகளுக்கும் பெருமை தர முடியாத ஒரு வரலாற்றைப் படமெடுப்பது உசிதமாகப் படவில்லை.

இன்கிரிட் பெர்க்மன் ஜோன் பாத்திரத்தில் நடிக்க இன்னும் ஆறாண்டுக் காலம் காத்திருக்க வேண்டியிருந்தது. முதலில் 1946—ம் ஆண்டில் நாடகமாக அமெரிக்காவில் அரங்கேற்றம். இரு ஆண்டுகள் கழித்து ஆங்கிலத் திரைப்படமாக. அவள் வாழ்க்கையில் பெரும் திருப்பம் ஏற்பட்டு அமெரிக்கா விட்டு வெளியேறி இத்தாலியில் குடியேறின பிறகு 1953—ம் ஆண்டில் ராபர்டோ ரோஸலினியின் டைரக்‌ஷனில் ஒரு புதிய நாடகமாக. அதுவே அடுத்த ஆண்டு திரைப்படமாக. ராபர்டோ ரோஸலினியுடன் அவள் 'ஓடிப் போன' பிறகு உலகமே அவளை ஒரு புழு பூச்சி போலத்தான் நினைத்தது. ஒரு சந்தர்ப்பத்தில் அவளுடைய மகள் பியாவே தன் தாயாருடன் சேர்ந்து வாழ விருப்பமில்லை என்று நீதிமன்றத்தில் வாக்குமூலம் கொடுத்தாள்.

எந்த ராபர்டோ ரோஸலினிக்காக இன்கிரிட் பெர்க்மன் கணவன், மகள், ஹாலிவுட் நட்சத்திர அந்தஸ்து, பொது மக்களிடம் பெரும் புகழ், மதிப்பு, வசதியான வாழ்க்கை எல்லாவற்றையும் துறந்து ஓர் அயல் நாட்டில் தான் சரளமாகப் பேச முடியாத வேற்றுமொழிச் சமூகத்தில் உலகமளாவிய அவப்பெயரும் நிந்தனைக்குமிடையில் தன் வாழ்வின் ஒரு கால கட்டத்தைத் துவக்கினாளோ அதே ராபர்டோ ரோஸலினி எட்டாண்டுகளுக்குள் இன்னொரு மணமான பெண்மணியை இன்கிரிட் பெர்க்மனைப் போலவே அனைத்தையும் துறந்து வந்தவளைத் தன்னுடன் அழைத்து வந்து விட்டான். இன்கிரிட் பெர்க்மனும் அந்த (இந்தியப்) பெண்மணியான ஸோனாலி தாஸ் குப்தாவும் பாரிஸ் நகரத்தில் சந்தித்தார்கள். இருவருக்கும் ஒரு வித்தியாசம். இன்கிரிட் பெர்க்மன் புகழேணியின் உச்சியிலிருந்து பத்திரிகைகள் மற்றும் தகவல் பரப்பு சாதனங்களால் கீழே தள்ளப்பட்டாள். யாருமறியாது ஒரு மூலையில் இருந்த ஸோனாலி அதே சாதனங்களால் வம்பு, வதந்திகளுக்காகவே உலகத்துக்கெல்லாம் அறிமுகப்படுத்தப் பட்டாள்!

இன்னொரு விநோதம், யாருக்காகப்பல தியாகங்களைச் செய்தாளோ அதே மனிதன் தொழில் முறையில் பெரிய சங்கடத்தில் சிக்கிக் கொண்டு இப்போது அவள் உதவியையே நாடுகிறான்! நள்ளிரவில் இன்கிரிட் பெர்க்மனுக்கு இந்தியாவிலிருந்து தொலைபேசி வருகிறது. அங்கிருந்து ராபர்டோ ரோஸலினி பேசுகிறான்: ''நான் காதலிப்பதாகக் கூறப்படும் அந்தப் பெண்ணின் கணவன் இங்கு என்னவெல்லாமோ செய்து நான் எடுத்து வந்த படத்தைப் பாதியில் நிறுத்தும்படி செய்து விட்டான். எடுத்தவரை படத்தைப் பறிமுதல் செய்ய ஏற்பாடு செய்துவிட்டான். இந்த நேரத்தில் எனக்கு உதவக் கூடியவர் இந்தியப் பிரதமர் நேருதான். அவர் இப்போது இலண்டன் சென்றிருக்கிறார். நீ எப்படியாவது என் சார்பில் அவரிடம்—''

இன்கிரிட் பெர்க்மன் இலண்டனில் ஆன் டாட் என்ற நடிகையோடு இந்த விஷயம் பற்றிப் பேசினாள். ஆன் டாடுக்கு நேருஜியின் சகோதரியைத் தெரியும்.



பாடும் 'பிரஷ்'கள்!

குழந்தைகளைக் காலையில் எழுப்பிப் பல் துலக்க வைப்பதற்குள் போதும் போதும் என்றாகி விடுகிறது சில தாய்மார்களுக்கு! இதற்கும் ஒரு விடிவு வந்து விட்டது!

ஆம், சிங்கப்பூரில் இப்போது 'பாடும் டூத் பிரஷ்'கள் விற்பனைக்கு வந்து விட்டன! இந்த 'பிரஷ்'ஷைப் பல்லில் வைத்து அழுத்தியதும் இதிலிருந்து மென்மையான இசைஒலி எழும்பும்! அதனால் குழந்தைகள் இதை விரும்பிப் பல் துலக்குவார்களாம்!

—சம்பத் குமாரி.

ஆதாரம்: ஸோஸைட்டி.

அடுத்த நாள் பாரிஸில் பகல் போஜனத்தின்போது நேருஜியுடன் சந்திப்புக்கு ஆன் டாட் ஏற்பாடு செய்தாள். இன்கிரிட் பெர்க்மனும் ஆன் டாடும் விமானம் மூலம் பாரிஸ் சென்று நேருஜியையும் அவர் சகோதரியையும் சந்தித்தனர்.

உணவு முடிந்து நேருஜியும் இன்கிரிட் பெர்க்மனும் தோட்டத்தில் உலவும்போது நேருஜியின் உன்னதத் தன்மை கண்டு இன்கிரிட் பெர்க்மனுக்குப் பெரும் வியப்பு.

''உங்கள் நாட்டில் என் கணவன் ராபர்டோ ரோஸலினி பெரும் சிக்கலில் மாட்டிக் கொண்டு அவதிப்படுகிறார்.''

''அப்படித்தான் கேள்விப்படுகிறேன். ஆனால் எப்படியும் அவர் இத்தாலி திரும்ப அனுமதிக்கப்படுவார்.''

''ஆனால் அவர் தயாரித்த படத்தைக் கையோடு எடுத்து வராமல் அவர் திரும்ப மாட்டார். அவருடைய வாழ்வே படமெடுப்பதுதான்.''

நேருஜி இன்னும் சிறிது தூரம் சென்றார். ''உன் கணவர் மீது நிறையப் புகார்கள் இருக்கின்றன போலிருக்கிறதே? பண விஷயத்தில் வேறு சிக்கலாம்!''

''நான் ஒப்புக் கொள்கிறேன். அவருக்கு எப்போதுமே சிக்கல்கள்தான். ஆனால் அவர் மிகவும் நல்லவர். மிகச் சிறந்த கலைஞன். அந்த மாதிரி மனிதர்கள் எப்போதும் வம்பில் மாட்டிக் கொள்வார்கள். அவர் எடுத்த படத்துடன் அவரையும் போக அனுமதித்தால் மிகவும் பெருந்தன்மையான செயலாக இருக்கும்.''

''அப்படியா?''

''ஒரு ஸ்வீடிஷ் பழமொழி இருக்கிறது. புல் நன்றாக விளைந்திருக்கும் போது தான் பசு மாடும் சாகிறது. அவரை நீங்கள் நெடுநாள் இந்தியாவிலேயே முடக்கிப் போடுமாறு செய்து விடக் கூடாது. அவரைப் பாழடித்து விடக் கூடாது. என்ன தவறு செய்திருந்தாலும் அவர் படம் எடுத்திருக்கிறார். அத்துடன் அவர் ஊர் திரும்ப நீங்கள் அனுமதிக்க வேண்டும்.''

இம்முறை நேருஜி வெறும் புன்னகை செய்து விட்டு நகர்ந்து விட்டார். ஆனால் அடுத்த நாளே ராபர்டோ ரோஸலினி இந்தியாவில் எடுத்த படச் சுருள்களோடு ஊர் திரும்ப அனுமதி வழங்கப்பட்டு விட்டது.

• • •

ராபர்டோ ரோஸலினி விமானத்திலிருந்து இறங்கி விமான நிலையத்துக்குள் வந்தவுடன் நான் அவனை அணைத்துக் கட்டிக் கொண்டபோது ஏராளமான காமிராக்கள் கண்சிமிட்டின. அந்தப் புகைப் படம் உலகெங்கும், எல்லாப் பத்திரிகைகளிலும் வெளியாகிற்று. நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் பார்த்து ஒன்பது மாதங்களாகியிருந்தன. ''நீ இன்னும் அந்த அசட்டு நாடகத்தில் நடித்து வருகிறாயா?'' என்று அவன் கேட்டான். எங்களுக்குள் பெருத்த மனவேற்றுமை உண்டு என்பதை வெளிப்படுத்திய அந்த நாடகம் — 'டீ அண்ட் சிம்பதி' —

''ஆமாம். அது பிரமாதமாகப் போய்க் கொண்டிருக்கிறது. ஒரு நாள் கூட ஒரு காலியிடம் கூடக் கிடையாது. ஆனால் நீ பார்க்க விரும்பினால் ஏற்பாடு செய்கிறேன்.''

''வேண்டாம்.''

நாங்கள் ராஃபேயல் ஹோட்டலில் அவன் தங்கியிருந்த அறையை அடைந்தோம். அவன் தலைமயிரை விரலால் சுருட்டிப் புரட்டிக் கொண்டிருந்தான். நான் மெதுவாகக் கேட்டேன். ''உனக்கு விவாகரத்து வேண்டுமல்லவா?''

அவன் பதில் தரவில்லை. நான் மீண்டும் கேட்டேன். ''உனக்கு என்னிடமிருந்து விவாகரத்து வேண்டுமல்லவா?''

மூன்றும் முறையாகவும் அதே கேள்வியைக் கேட்டேன். இம்முறை அவன் தணிந்த குரலில் பதில் தந்தான்: ''ஆமாம், எனக்கு மிஸ்டர் பெர்க்மனாக இருந்து அலுத்துப் போய் விட்டது.''

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. ரோஸலினியைத்தான் என்னை விடப் புகழ்படைத்தவனாகவும் மதிப்பு உடையவனாகவும் நான் நினைத்திருந்தேன்.

நான் ஸோனுலியைச் சந்தித்ததைப்பற்றிக் கூறினேன். அவர்கள் இருவரும் சந்தோஷமாக இருக்க வாழ்த்துக்கள் தெரிவித்தேன்.

''குழந்தைகள் உன்னிடமே இருக்கட்டும். குழந்தைகள் தாயாரிடத்தில் தான் இருக்க வேண்டும்.'' (இன்கிரிட்டுக்கும் ரோஸலினிக்கும் ஒரு மகன் — ராபர்டினோ - மற்றும் இரட்டைப் பெண்கள் இஸபெல்லாவும் இன்கிரிடும்.)

''சரி.''

''இரு நிபந்தனைகள்.''

''என்ன?''

''குழந்தைகள் அமெரிக்காவுக்கே போகக் கூடாது.''

---

''வீட்டிலே சமைக்க ஆள் வேணும், அதனால் கல்யாணம் பண்ணிக்கோன்னு எங்கப்பா சொன்னதை மறுத்தது தப்பாய்ப் போச்சு!''

''ஏன்?''

''அவரே கல்யாணம் பண்ணிக்கிட்டார் கடைசியிலே!''

—சம்பத்குமாரி.



''அது எப்படி முடியும்? அவர்கள் படிப்பை வேண்டுமானால் ஐரோப்பாவிலேயே ஏற்பாடு செய்யலாம். ஆனால் பதினெட்டு வயதுக்குப் பிறகு அவர்கள் இஷ்டப்படி தானே விட வேண்டும்?''

''சரி, பதினெட்டு வயது வரை அவர்கள் அமெரிக்கா போகக் கூடாது.''

''அடுத்த நிபந்தனை?''

''நீ மறுபடியும் மணந்து கொள்ளக் கூடாது!''

''ஏன்?''

''இந்த வயதில் மறுபடியும்—''

'என்னை விடப் பத்து வயதுப் பெரியவன் நீ. நீ ஒரு இளம் இந்திய அழகியோடு சுற்றுகிறாய்; நான் மட்டும் மறுமணம் செய்து கொள்ளக் கூடாது?''

''உனக்கு நான்கு குழந்தைகள் இருக்கின்றனவே! அதற்குமேல் என்ன?''

நான் சிரித்தேன். அவன் மாறவே இல்லை.

விவாகரத்து முடிவான பிறகு 'டீ அண்ட் சிம்பதி' நாடகத் தயாரிப்பாளராகிய லார்ஸ் ஷ்மிட் நீண்ட காலம் என்னை வேண்டிக் கேட்டுக் கொண்டதற்கு இணங்க இன்னொரு மணத்திற்குச் 'சரி' என்றேன்.

● ● ● ●

'நியோ—ரியலிஸம்' என்ற ஒரு புது திரைப்பட வடிவத்தை உலகத்துக்கு அளித்த ராபர்ட்டோ ரோஸலினி இன்கிரிட் பெர்க்மனை முக்கிய நடிகையாக அமர்த்தி ஆறு படங்கள் எடுத்தான். அந்த ஆண்டுகளில் அவனுடைய திரைப்பட வாழ்க்கை குறிப்பிடத் தகுந்தபடி வெற்றிகரமாக அமையவில்லை. அவளால் தான் அவன் சீரழிந்து போகிறானோ என்ற உணர்வு இன்கிரிட் பெர்க்மனுக்குச் சங்கடமளிக்கும். புகழேணியின் உச்சியில் இருந்த அவளுடைய ஹாலிவுட் திரைப்பட வாழ்க்கை அவனால்தான் பாழானது என்ற உணர்வு ரோஸலினியைத் தொந்தரவு படுத்தியிருக்க வேண்டும். அவனுக்காக, அவள் நடித்த முதல் படமாகிய 'ஸ்ட்ராம்போலி'யின் போதே ரோஸலினியின் திரைப்படப் பாணி அவளுடைய பயிற்சிக்கு மிகவும் முரண்பட்டது என்பதை அவள் அறிந்து கொண்டாள். அவனுக்கு நடிகர்கள் ஒரு பொருட்டில்லை. அவன் கண்ணுக்குத் தென்படுகிறவர்களை நடிக்கச் சொல்லி விடுவான். அதேபோல் வசனமும் ஒரு பொருட்டில்லை. திட்டமேயில்லாமல் படப்பிடிப்பு நடக்கும். சில நாட்களில் ஒரு வேலையும் உருப்படியாக இராது. ''நீயும் உன் நியோ—ரியலிஸமும்!'' என்று ஒரு முறை இன்கிரிட் கத்தி விட்டாள். ஆனால் ரோஸலினி மீதுள்ள அன்போ மதிப்போ சிறிதளவும் குறையவில்லை.

''யாருக்கும் ஒரு நாடகப் பள்ளியிலோ பயிற்சிக் கூடத்திலோ நடிப்பு கற்றுக் கொள்ளத் தேவையில்லை. எல்லோரும் இயல்பாகவே நடிகர்கள்தாம். நியோ—ரியலிஸம் வெறும் மேற்பூச்சோடு நிற்பதில்லை. அது ஆன்மாவை எட்டுவது''. என்று அவன் கூறுவான்.



### ராகம் கண்டுபிடிக்கும் கம்ப்யூட்டர்

'பிலானி'யிலுள்ள 'பிர்லா விஞ்ஞானத் தொழில் நுட்ப நிறுவனம்' ஒரு புதிய கம்ப்யூட்டரைக் கண்டு பிடித்துள்ளது. இந்தக் கம்ப்யூட்டர் எல்லா ராகங்களையும் தன் நினைவில் வைத்துக் கொண்டுள்ளது! அதனால், ஏதாவது ஒரு ராகத்தின் பெயரை இதனிடம் கொடுத்தால்போதும், அந்த ராகத்தை அடிப்படையாகக் கொண்டு வெளியான திரைப்படப் பாடல்களின் பட்டியலைத் திரையில் காணலாம்! தகவல்: 'சம்பத்குமாரி.'

ஆதாரம்: காரவான்



1940-களில் எழுத்துலகின் சிகரத்திலிருந்த எர்னஸ்ட் ஹெமிங்வே அவருடைய நாவல் 'ஃபார் ஹூம் தி பெல் டோல்ஸ்' திரைப்படமாக்கப்பட்டால் கதாநாயகி மரியாவாக இன்கிரிட் பெர்க்மன் நடிப்பதையே விரும்புவதாகக் கூறியது இன்கிரிடின் புகழையும் செல்வாக்கையும் மிகவும் உயர்த்தியது. சில ஆண்டுகளுக்குப் பிறகு மேற்கத்தியப் பத்திரிகைகள் அனைத்தும் ஒரு குரலாக இன்கிரிடை வசை பாடியபோதும், ஹெமிங்வே உற்சாகமூட்டும் படியாகவே அவளுக்குக் கடிதம் எழுதினார். ''நமக்கிருப்பது ஒரு வாழ்க்கையே. யாருமே முழுப் புகழ் அல்லது இகழ்ச்சி கொண்டவர்களில்லை. நீ ஒரு மகத்தான நடிகை. அப்படிப்பட்டவர்கள் தொல்லைப்படாமல் முடியாது... நீ ரோஸலினி மீது அவ்வளவு அன்பு கொண்டிருந்தால் அவனை உன்னிடம் சரியாக நடந்து கொள்ளச் சொல். இல்லாது போனால் நான் அவனைச் சுட்டுக் கொன்று விடுவேன்...''

ஷாவின் 'காப்டன் பிராஸ்பௌண்ட்ஸ் கன்வெர்ஷன்' எனும் நாடகம் நியூயார்க் பிராட்வேயைச் சென்றடைந்தது. விமரிசகர்கள் பெர்னார்ட் ஷாவின் எழுத்தில் குறை கண்டாலும் இன்கிரிட் பெர்க்மனின் நடிப்பு ஒரு புதுச் சாதனை என்றார்கள். பிராட்வேயில் அந்த ஆண்டு மேடையேறிய ஐம்பத்தாறு நாடகங்களில் 'காப்டன் பிராஸ்பௌண்ட்' ஒன்றுதான் இலாபம் கண்டது.

வாஷிங்டனில் தேசியப் பத்திரிகையாளர் சங்கம் இன்கிரிட் பெர்க்மனுக்கு

ஒரு தனிக் கூட்டம் ஏற்பாடு செய்து கௌரவித்தது. அதே நகரில் இருபத்தி ரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அமெரிக்க மக்கள் சபையில் செனட்டர் ஜான்ஸன் என்பவர் இன்கிரிட் பெர்க்மனைப் பகிரங்கமாக இகழ்ந்து உரையாற்றி இருந்தார்: ''ஸ்ட்ராம்போலி' என்னும் ஆபாசத்தில் ஹாலிவுட் ஒரு பாடம் கற்றுக்கொள்ளுமானல் இன்கிரிட் பெர்க்மன் என்னும் நடிகை படுநாசமடைவது வீணாகாது. அவளுடைய சாம்பரிலிருந்து ஒரு மகத்தான ஹாலிவுட் உருவாகும்!''—இது இன்கிரிடுக்கு மாறாத வடு உண்டுபண்ணியிருந்தது.

ஆனால், அவள் சாம்பலாகவில்லை. அவள் நடித்த நாடகங்களும், திரைப் படங்களும் தொடர்ந்து புகழும் மதிப்பும் பெற்றன. ரோஸலினிக்காக அவள் நடித்த படங்கள் வெகுஜன ரீதியில் வெற்றிபெறு விட்டாலும் நேர்மையிலும் நோக்கத்திலும் அப்பழுக்கற்றனவ.

**1975**—ஆம் ஆண்டு ஆஸ்கர் விழாவில் டைரக்டர் ஜான் ரென்வாவுக்கு ஒரு சிறப்புப் பரிசு அளிக்கப் போவதாக அறிவிப்பு வந்தது. நான் அவருடைய படம் ஒன்றில் நடித்திருக்கிறேன். ரோஸலினி பெரிதும் மதித்த டைரக்டர்களில் ரென்வாவும் ஒருவர்.

ரென்வா அப்போது அமெரிக்காவில்தான் இருந்தார். உடல்நிலை அவ்வளவு சரியில்லை. விழாவுக்கு நானும் வந்து பரிசை அவர் சார்பில் வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அது இயலாதெனில் பரிசையே மறுத்து விடுவதாகக் கூறினார். நான் அப்போது லார்ஸ் ஷ்மிட் தயாரிப்பான 'கான்ஸ்டண்ட் வைஃப்' நாடகத்தில் பாஸ்டன் நகரில் நடித்து வந்தேன். நானும் லார்ஸும் ஹாலிவுட் செல்வதற்கென்றே நாடகம் சில நாட்களுக்கு நிறுத்தி வைக்கப்பட்டது. ரென்வாவுக்கு ஆஸ்கார் சிலையைப் பரிசாகத் தரும் போது நான் ஒரு சிறு பிரசங்கம் செய்தேன். ரென்வாவுடைய தீவிரம், தனித்துவம், கவித்துவப் பார்வை, கருணை பற்றிக் கூறி, ''எண்ணற்ற ரசிகர்கள், இளம் டைரக்டர்களின் நன்றியின் சின்னமாக இதைக் கருதுகிறேன்'' என்றேன்.

எல்லோரும் கரகோஷம் செய்தார்கள். நான் என்னிடத்தில் போய் உட்கார்ந்தேன். ஆனால் நானே ஒரு ஆஸ்கார் பரிசு வெல்வேன் என்று நினைக்கவில்லை. 'மர்டர் ஆன் தி ஓரியண்ட் எக்ஸ்பிரஸ்' படத்தில் ஒரு சிறு பாத்திரத்தில் நடித்த என் பெயரும் பரிசுக்கு முன் மொழியப்பட்டிருந்தது. நான் இதற்கு முன்னர் ஐந்து முறை முன்மொழியப் பட்டு இருமுறை ('காஸ்லைட்' — 1944, 'அனஸ்டேசியா' — 1956) சிறந்த நடிகைப் பரிசை வென்றிருக்கிறேன். ஆனால் இம்முறை என் பாத்திரம் மிகமிகச் சிறியது. மேலும் 'டே ஃபார் நைட்' என்ற படத்தில் வாலண்டீனா கார்டீஸா அற்புதமாக நடித்திருந்தாள். அவளையன்றி வேறு யாருக்கும் சந்தர்ப்பமேயில்லை என்று தான் நான் நினைத்திருந்தேன். ஆனால் திடீரென்று என் பெயரைச் சொல்லிப் பரிசு எனக்கு என்று அறிவித்தார்கள். நான் மேடைக்கு ஓடினேன். ''எனக்குப் பரிசு கொடுத்திருக்கிறீர்கள். ஆனால் இது வாலண்டீனா கார்டீஸாவுக்கு நியாயம் செய்வதாகாது'' என்று பகிரங்கமாக ஒலி பெருக்கியில் சொன்னேன். வாலண்டீனா கார்டீஸா என்னை மிகுந்த நன்றியுடன் பார்த்தாள். ஆனால் பிறகுதான் என் முட்டாள்தனத்தை உணர்ந்தேன். சிறந்த நடிகைப் பரிசுக்காக இன்னும் மூன்று பேர் முன்மொழியப்பட்டிருந்தார்கள். அவர்களும் மிகச் சிறப்பாக நடித்திருந்தார்கள். நான் வாலண்டீனாவை மட்டும் தனித்துக் கூறியதற்காக அவர்கள் என் மீது மிகவும் கோபமாக இருந்தார்கள். நான் வாயை மூடிக் கொண்டு இருந்திருக்கலாம்.

அந்த விழாவுக்குப் பிறகு தான் நானும் லார்ஸ் ஷ்மிட்டும் விவாகரத்து செய்து கொண்டோம். நாங்கள் கணவன்—மனைவியாகவே வாழ்ந்ததில்லை. லார்ஸுக்குக் குழந்தை வேண்டுமென விருப்பம் இருந்தது. அவருடன் எனக்குக் கல்யாணம் ஆகும் போதே எனக்கு வயதாகி விட்டது. ஒரு குழந்தையை சுவீகாரம் எடுத்துக் கொள்ளலாம் என்று அவர் அபிப்பிராயப்பட்டார். ஆனால் எனக்கு நான்கு குழந்தைகளுக்குத் தாயான பிறகு இன்னொரு குழந்தையை வளர்க்கத் தயக்கமாயிருந்தது. என் மண வாழ்க்கை இறுதியாக முற்றுப் பெற்றது.

**த**ற்செயலாக மே மாதம் 1976ம் ஆண்டில் ராபர்டோ ரோஸலினியின் பிறந்த தினத்தன்று நான் ரோம் நகரத்தில் இருந்தேன். அதற்கு முந்தைய தினம் கிளம்பியிருப்பேன். அவன்தான் கேட்டான், ''என் பிறந்த நாளன்று? எனக்கு எழுபது வயது முடிகிறது தெரியுமா?''

நான் அன்று தங்கியதோடு அல்லாமல் ஒரு சிறு விருந்துக்கும் ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தேன். அவனுக்கு மகிழ்ச்சியளிக்கும் வண்ணம், பத்திரிகைகள் அவனுடைய சாதனைகளை விவரித்து நிறையக் கட்டுரைகள் வெளியிட்டிருந்தன. எங்கள் இருவருக்கும் பிறந்த இரட்டைப் பெண்களையும் விருந்துக்கு அழைத்துச் சென்றேன். அவர்கள் ஒரு வாழ்த்துரை எழுதியிருந்தார்கள். அதில் அவன் அடிக்கடி கூறும் பழமொழிகளையும் கோபத்தில் கத்தும் சொற்களையும் பயன்படுத்தி எழுதியிருந்தார்கள். ஆனால் அவர்களுக்குப் பயம், எங்கே அப்பா கோபித்துக் கொள்வாரோ என்று. நான்தான் தைரியமூட்டினேன். முடிவில் அந்த வாழ்த்துரை படிக்கப்பட்ட போது ராபர்டோ விழுந்து விழுந்து சிரித்தான். அதை இன்னொரு முறை படிக்கச் சொல்லிக் கேட்டு மகிழ்ந்தான். அப்போது ஹோட்டல் சிப்பந்தி ஒருவன் உணவுப் பட்டியலை ராபர்டோவிடம் நீட்டினான். அவனைச் சற்றும் கவனியாமல் பட்டியலை மட்டும் ராபர்டோ படிக்க ஆரம்பித்தான். அந்தச் சிப்பந்தி. ''அப்பா என்னைத்

தெரியவில்லையா? நான்தான் ராபர்டினோ!'' என்றான். இந்த மாறுவேடமும் என் ஏற்பாடு. ராயல்டோ குதித்து எழுந்தாள். மகனை இறுகத் தழுவிக் கொண்டாள்.

அடுத்த ஆண்டு எனக்கு இங்கிலாந்தில் நாடகம். 'வாடர்ஸ் ஆஃப் தி மூன்!' ஜூன் மாதம் 3-ம் தேதி ரோம் நகரிலிருந்து அவசர அழைப்பு. நான் டெலிபோனில் பேசினேன். ராபர்டோ ரோஸலினிக்கு மாரடைப்பு ஏற்பட்டிருக்கிறது. அவனிருந்த தெருவில் எதிர்சாரியில் முதல் மனைவி வீட்டிற்குத் தகவல் அனுப்பியிருக்கிறான். ஆனால் அவள் வந்து சேருவதற்குள் அவன் உயிர் பிரிந்து விட்டது.

ஒரு விருந்தின் போது இன்கிரிட் பெர்க்மனிடம் ஸ்வீடன் நாட்டுத் திரைப்பட மேதை இங்மார் பெர்க்மன், ''என் படம் ஒன்றில் நடிக்க வேண்டும்'' என்றார். ஹியல் மார்க் பெர்க்மன் என்பவர் எழுதிய நூலைப் படமெடுப்பது பற்றி அபிப்பிராயமும் கேட்டார். ஒரே திரைப் படத்தில் மூன்று பெர்க்மன்கள். ஆனால் ஒருவரும் உறவுமுறை கிடையாது!

தொடர்ந்து கடிதப் போக்குவரத்து இருந்தது. ஆனால் படம் உடனடியாக எடுக்கப்படவில்லை. பல ஆண்டுகள் சென்று ஒரு திரைப்பட விழாவில் இன்கிரிட் பெர்க்மன் மீண்டும் இங்மார் பெர்க்மனைச் சந்தித்தார். ''உங்கள் பையில் ஒரு கடிதத்தைப் போட்டிருக்கிறேன்'' என்றான்.

'இதைக் கோபத்தில் செய்யவில்லை. காலம் எப்படிப் பறந்து போய் விடுகிறது என்பதைக் காட்டத்தான்' என்று அதில் எழுதியிருந்தது.

இதற்கும் இரண்டு வருடங்கள் கழித்து இங்மார் பெர்க்மனிடமிருந்து போன் வந்தது: ''உனக்காகக் கதை வைத்திருக்கிறேன். அம்மா மகள் பற்றி கதை....''

இன்கிரிட் அந்த ஸ்வீடிஷ் படத்தில் நடிக்க ஒப்புக் கொண்டாள். அதுவே அவளுடைய கடைசிப் படமாக அமைந்தது. படத்தின் பெயர் 'ஆடம் ஸொனாடா.' வெளியான ஆண்டு 1978.

● ● ● ●

இன்கிரிட் பெர்க்மன் தன்னுடைய ஐம்பத்தெட்டாவது வயதில் ஒரு சந்தேகத்தின் பெயரில் ஒரு புற்றுநோய் நிபுணரைப் போய்ப் பார்த்தாள். அவளுக்கு மார்பகத்தில் நோய் கண்டுவிட்டது.

இன்கிரிட் பெர்க்மன் மனம் தளரவில்லை. சிகிச்சையினூடேதான் பல முக்கிய, கடினமான நாடக பாத்திரங்கள் மற்றும் திரைப் படங்கள்; ராபர்டோவின் மரணம்; இன்னொரு ஆஸ்கார் விருது. எல்லாவற்றுக்கும் மேலாக இங்மார் பெர்க்மன் படத்தில் நடித்து ஏகோபித்த பாராட்டும்.

ஒன்பதாண்டுகள் அறுவை சிகிச்சை, கதிரியக்கச் சிகிச்சை என நோயுடன் போராடியது 1982-ஆம் ஆண்டு ஆகஸ்டு 29-ம் தேதியோடு முடிந்தது. இலண்டனில் இன்கிரிட் பெர்க்மன் இறுதியாகக் கண்களை மூடியபோது அவளுக்கு அறுபத்தேழு வயதாகியிருந்தது.


நீங்கள்
ஆவலுடன்
எதிர்பார்க்கும்

★ 100 யோசனைகள்
-இரண்டாம் பகுதி

- இலவச இணைப்பு

★ வீட்டை அலங்கரிப்பது எப்படி?

★ மனச்சோர்வுக்கு மாற்று உங்கள் கையில்!

★ உடல் இளைக்க வேண்டுமா, உஷார்!

★ கங்கை யமுனை இங்குதான் சங்கமம்
-குறுநாவல்

மற்றும்,
சிறப்பம்சங்களுடன் -

மங்கையர் மலர்

ஜூலை '84

# இயற்கை வைத்தியம்!

## எஸ்.ஆர்.ஸி. இன்ஸ்டிடியூட் ஆப் நேச்சுராபதி அண்டு யோகா

**31, கி.மீ. நியு மகாபலிபுரம் ரோடு, முத்துக்காடு**
**கிராமம்-603 112, சென்னை**

என்கிற விலாசத்தில் எல்லா வசதிகளுடனும் கொண்ட காட்டேஜ், ஸ்பெஷல் வார்டு தங்குவதற்கும் சிகிச்சைக்கும் தயாராக உள்ள மருத்துவமனை இயங்கத் தொடங்கி விட்டது.

திங்கள் முதல் சனி வரை மாலை 5 முதல் 7 மணி வரை

**3, கூபர்ஸ் தெரு, (பிராட்வே), சென்னை-1**

**என்ற விலாசத்தில் இலவச ஆலோசனை பெறலாம்**

---

**நீரிழிவு, ஆஸ்த்மா போன்ற வியாதிகளுக்கு வந்து சிகிச்சை பெறும் முதல் 5 பேர்களுக்கு இலவச இயற்கை வைத்தியம் அளிக்கப்படும்**

---

இதர விவரங்களுக்கு உடனே அணுகவும்.

**போன்: 21642 / 24899**

CHAVI

**"கல்கி"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 78-00 |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 39-00 |
| **வெளிநாடு கப்பல் தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 190/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 95/- |

**"மங்கையர் மலர்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 12/- |
| **வெளிநாடு கப்பல் தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 48/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 24/- |

**"கோகுலம்"**

சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா | ரூ. | 24/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 12/- |
| **வெளிநாடு கப்பல் தபால் மூலம்** | | |
| ஆண்டுச் சந்தா | ரூ. | 70/- |
| ஆறு மாதச் சந்தா | ரூ. | 35/- |

சந்தா தொகையை M.O. அல்லது I.P.O. அல்லது டிமாண்டு டிராப்டு மூலம் அனுப்ப வேண்டும்

**மானேஜர் * கல்கி * சென்னை-600 032**



# கோகுலம் வெகுமதி திட்டம்

உங்களுக்குப் பிடித்தமான ஏதேனும் ஒரு பள்ளிக்குக் கோகுலம் உங்களுடைய அன்பளிப்பாகக் கிடைக்கச் சந்தா அனுப்புமாறு கோரியிருந்தோம். குழந்தைக் குலத்தை குதூகலிக்கச் செய்யப் பின்வருவோர் முன்வந்துள்ளனர்.

என்.எஸ்.ராகவேந்திரன்
எஸ்.எஸ்.ஏ.வி.இ.வி.ஆர்.ஐ.
காரைக்குடி—623 006

கார்ப்பரேஷன் மிடில் பள்ளி,
25, நாகப்ப முதலி தெரு,
கொய்யாத் தோப்பு, சென்னை—2.

ஸ்ரீமதி இந்திரா அனந்தகிருஷ்ணன்,
சி—115, இந்தர்புரி,
புதுடில்லி—110 012.

டி.டி.ஈ. ஏ. ஹையர் செகண்டரி ஸ்கூல்,
சாது வாசுவாஹி மார்க்,
புதுடில்லி—110 005.

எம். வி. ஈ. தங்கபாண்டியன்,
அக்கௌண்டண்ட், பஞ்சாப்நேஷனல் பேங்க்,
கர்நூல், ஆந்திரா.

கார்ப்பரேஷன் மிடில் ஸ்கூல்,
3, அவதானம் பாப்பையர் தெரு,
சூளை—சென்னை—600 112.
கோடி எம். அப்புசெட்டியார் ஹைஸ்கூல்,
சென்னை—12.

செல்வகணபதி,
19, வெங்கடரமண ரோட்,
ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்—641 002.

சித்தாள் ஆச்சி நினைவு உயர்நிலைப்பள்ளி,
கண்டனூர்—623 104.

முகம்மது ஹனீபா,
2, சுப்பராய முதலித் தெரு,
புதுப்பேட்டை, சென்னை—2.

நேத்ரம்பாக்கம் முனுசாமி முதலியார்
ஆரம்ப பாடசாலை,
14, வெங்கடாசல முதலித் தெரு,
புரசைவாக்கம், சென்னை—7.

எம். சிவம்,
18, பவுனியார் வீதி,
ராஜபாளையம்—626 117.

இராஜாக்கோட்டை 2—வது எண் துவக்கப்
பள்ளி,
246, பெத்தையா தெரு,
ராஜபாளையம்—626 117.

ஆர். வேலுசாமி கவுண்டர்,
மராண்காட்டூர், வாழைத்தோட்டம்
(வழி) சிவகிரி—ஈரோடு.

சிவகுரு நிதி உதவி துவக்கப் பள்ளி,
வாழைத் தோட்டம்.P.O.
(வழி)சிவகிரி—639109பெரியார்மாவட்டம்

சு. தங்கவேலு,
அறிவியலாளர்,
மத்திய மின்வேதியியல் ஆராய்ச்சி நிலையம்,
காரைக்குடி—623 006.

இராம. சு. இராமநாதன் செட்டியார் நகர்
மன்ற ஆரம்பப் பள்ளி,
செக்காலை,
காரைக்குடி—623 002.

என். சுப்பிரமணியம் எம்.ஏ.பி.டி.,
ஓய்வுபெற்ற தலைமை ஆசிரியர்,
பிளாட்நம்பர்—15, சாகம்பாரி,
பெத்தலபுரம், கிழக்கு தாம்பரம், சென்னை—59.

லால்சந்த் மிலாப்சந்த் தாதா பள்ளி,
6, கிருஷ்ணபுரம், சூளைமேடு,
சென்னை—94.

நடாதூர் நம்பி,
பாண்டிச்சேரி.

எல்.பி. வடிவேலு, டீச்சர், பிஷப் ஹீபர்
ஹையர் செகண்டரி ஸ்கூல், புத்தூர்,
திருச்சி—620 017.

ராஜாராம்,
டைப் IV குவார்ட்டர்ஸ்,
C/o ஆர். சுப்பிரமணியன்,
D.E. டெலிபோன்ஸ் தானே எக்ஸ்சேஞ்ச்,
தானே—2.

அபர்ணா வித்யாலயா,
எம். எஸ். எம். நகர்,
வலசரவாக்கம்,
சென்னை—600 087.

# மருத்துவத் துறையில் எத்தனை பிரிவுகள்!

மருத்துவக் கல்லூரி அட்மிஷன்கள் பற்றி மருத்துவக் கல்வி இயக்குனரான டாக்டர் திருமதி லலிதா காமேஸ்வரன் பல்வேறு விஷயங்களையும் சொல்கிறார். நிறையபேர் மெடிக்கல்காலேஜ் அட்மிஷன் பற்றிப் பொதுவாக கேள்விகளையும் சந்தேகங்களையும் அனுப்பியிருக்கின்றனர். ஒரு சிலர் பி.டி.எஸ். நர்ஸிங், லாப் டெக்னீஷியன் போன்ற குறிப்பிட்ட படிப்புகள் பற்றித் தகவல்கேட்டு எழுதியுள்ளனர். இக்கட்டுரைப் பகுதி அவையனைத்துக்கும் விடையளிக்கிறது.

தமிழகத்தில் மொத்தம் 8 மருத்துவக் கல்லூரிகள். சென்னையில் 3, (ஸ்டான்லி, கீழ்ப்பாக்கம், சென்னை ம. கல்லூரிகள்) செங்கல்பட்டு, மதுரை, கோவை, தஞ்சை, நெல்லை, இங்கெல்லாம் சொல்லித் தரப்படும் பல்வேறுமருத்துவப்படிப்புகளை விவரமாய்ப் பார்க்கலாமா?

முதலில் எம்.பி.பி.எஸ். இதற்கு ஏசப்பட்ட கிராக்கி. படிப்பு நாலரைவருடம். பின் ஓராண்டு ஹவுஸ் சர்ஜன் பயிற்சி கட்டாயம். இதில் சேர பிளஸ் 2-ல், பௌதிகம், வேதியியலுடன், உயிரியலையோ, அல்லது தனித்தனியே தாவர இயல், விலங்கியலுமோ படித்திருக்க வேண்டும்.



○ பல் வைத்தியர் ஆகலாம்

8 மருத்துவக் கல்லூரிகளிலும் மொத்தமுள்ள இடங்கள் 1070.

ஒரு விஷயம். மெடிக்கலுக்கு விண்ணப்பித்தாலும், கிடைக்குமா என்ற சந்தேகத்திலுள்ளவர்கள், எதற்கும் பி.எஸ்ஸி படிப்புக்கும் விண்ணப்பித்து விடுவது நல்லது. ஒருவேளை மெடிக்கல் கிடைக்காவிட்டால், ஒரு வருடத்தை வீணாக்காமல், பி.எஸ்ஸியாவது படிக்கலாமில்லையா?

அடுத்து பி.டி.எஸ். என்கிற பல் மருத்துவப் படிப்பு. கல்வித் தகுதி, எம்.பி.பி.எஸ். போலவே. சென்னை பல் மருத்துவக்கல்லூரியில் மட்டுமே இது உள்ளது. இடங்கள் 45. இதுவும் நாலரையாண்டுப் படிப்பு.

மூன்றாவதாய் பி.ஃபார்ம் என்கிற மருந்துகள் தயாரிப்பு பற்றியது. கல்வித் தகுதி: கணிதம், விஞ்ஞான பாடங்கள். மொத்தம் 56 இடங்கள் சென்னை மருத்துவக் கல்லூரி மற்றும் மதுரை ம. கல்லூரியில். 4 ஆண்டுப் படிப்பு இது.



○ லலிதா காமேஸ்வரன்

அடுத்து பி.எஸ்ஸி (நர்ஸிங்) சென்னை காலேஜ் ஆஃப் நர்ஸிங்கில் 40 ஸீட் உள்ள இந்த 4 வருடப் படிப்புக்குக் கல்வித் தகுதி விஞ்ஞானப் பாடங்களுடன் நர்ஸிங் சிறப்புப் பாடமாய்ப் படித்திருக்க வேண்டும்.

ஐந்தாவதாய் பிஸியோ தெரப்பி பட்டப் படிப்பு: 27 இடங்கள், மூன்றரை ஆண்டுகள், சென்னையில் உள்ள பிஸியோதெரப்பி இன்ஸ்டிடியூட்டில். கல்வித் தகுதி எம். பி. பி. எஸ். போலவே.

மேற்கூறியவை தவிர ஒரு சில டிப்ளமா படிப்புகளும் மருத்துவத்துறையில் தரப்படுகின்றன. இந்த டிப்ளமா படித்தவர்களுக்கும் வேலை வாய்ப்புகள் நன்றாகவே உள்ளன.

1. டிப்ளமா இன் நர்ஸிங்:
கல்வித் தகுதி: பி.எஸ்ஸி. நர்ஸிங் போலவே. இது பொதுவாய் எல்லா மருத்துவக் கல்லூரி மருத்துவமனைகளிலும் தரப்படுகிறது. பெண்களுக்கு மட்டுமேயான இந்தப் படிப்பில், ஆறு மாதத்துக்கொருமுறை மொத்தம் 370 மாணவிகள் சேர்த்துக் கொள்ளப்படுவர். இப்பயிற்சி காலத்தில் முதல், 2-ம், 3-ம் வருடங்களில் முறையே ரூ. 115, ரூ. 120, ரூ.125

உதவித் தொகை அரசால் வழங்கப்படுகிறது. மேற் சொன்ன ஆஸ்பத்திரிகள் தவிர, திருச்சி, தூத்துக்குடி, திண்டுக்கல், புதுவை, கோவை நகரங்களில் உள்ள சில தனியார் மருத்துவ மனைகளும் இப்பயிற்சியை அளிக்கின்றன.

அடுத்து டிப்ளமா இன் ஃபார்மஸி. கணிதத்துடன், விஞ்ஞானமும் படித்திருக்க வேண்டும். ஓராண்டுப் படிப்பு. மதுரை, தஞ்சை, கோவை மருத்துவக்கல்லூரிகளில். அரசின் உதவித் தொகை மாதம் ரூ. 30. தவிர, இப்படிப்பை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் சேலம், உதகை, சென்னையிலும் கூடப்படிக்கலாம்.

இந்த டிப்ளமாப் படிப்புக்கள் தவிர, நல்ல எதிர்காலத்தை அளிக்கக் கூடிய பல சர்ட்டிஃபிகேட்படிப்புக்களும் உள்ளன. அவற்றைப் பற்றிய விவரம் கீழே.

இவை எல்லாவற்றுக்கும் விஞ்ஞான பாடம் படித்திருக்க வேண்டும்.

இவை தவிர சித்த, ஹோமியோபதி மருத்துவங்களிலும் படிப்புக்கள் உள்ளன. இதற்கான இயக்குனர் அண்ணா நகரில் இருக்கிறார்.

விடைபெறுகையில் திருமதி லலிதா காமேஸ்வரன் சொன்னார். "மருத்துவப் படிப்புக்களுக்குவிண்ணப்பிக்கிற உங்கள் வாசகர்களுக்கு— வாசகர்களின் குழந்தைகளுக்கு என் மனமார்ந்த வாழ்த்துக்களைச் சொல்லுங்கள்."

சம்பந்தப்பட்டவர்கள் வாழ்த்துக்களைப் பெற்றுக் கொள்ளவும்.

-எஸ். சந்திரமௌலி

| படிப்பு விவரம் | கால அளவு | மொத்த இடங்கள் | பயிற்றுவிக்கப்படும் இடங்கள் | உதவித்தொகை விவரம் |
|---|---|---|---|---|
| கதிர்வீச்சியல் உதவியாளர் பயிற்சி (C.R.A. | 1 வரு. | 30 | சென்னை, மதுரை ம.கல்லூரிகள். | மாதம் ரூ. 70. |
| சுகாதார ஆய்வாளர் பயிற்சி | 1 வரு. | 350 | ஸ்டான்லி, கீழ்ப்பாக்கம் மதுரை, தஞ்சை, செங்கல்பட்டு கல்லூரிகளில் | — |
| கிரேட் 1, ஆராய்ச்சி கூட டெக்னீஷியன் பயிற்சி | 1 வரு. | 32 | கிங் நிலையம், கிண்டி. | 17 பேர்களுக்கு மட்டும் மாதம் ரூ.100 |
| டெண்டல் மெகானிக் என்ற பல் பொருத்துபவர் பயிற்சி | 2 வரு | 6 | பல் மருத்துவக் கல்லூரி, சென்னை. | மாதம் ரூ. 50. |
| டெண்டல் ஹைஜீனிஸ்ட் என்கிற பல் துப்புரவாளர் பயிற்சி | 2 வரு. | 6 | பல் மருத்துவக் கல்லூரி, சென்னை. | மாதம் ரூ. 50. |
| ஆர்த்தோப்டிஸ்ட் என்ற கண் பார்வை திறன் அறிபவர் பயிற்சி | 2 வரு. | 6 (பெண்களுக்கு மட்டும்) | ராஜாஜி மருத்துவமனை, மதுரை. | மாதம் ரூ. 50. |
| ஆப்டீஷியன் என்ற கண்ணாடி தயாரிப்பவர் பயிற்சி | 2 வரு. | 30 | அரசு கண் மருத்துவமனை, சென்னை. | மாதம் ரூ. 50. |
| கண் சிகிச்சை உதவியாளர் பயிற்சி. | 2 வரு. | 15 | மதுரை, தஞ்சை ம. கல்லூரிகள். | — |
| எம்.ஆர்.டி. கோர்ஸ் எனப்படும் மருத்துவ பதிவேடுகள் நுட்புனர் பயிற்சி | 6மாதம் | 6 | அரசு குழந்தைகள் நல மருத்துவமனை, சென்னை. | — |

# திருமண வைபவங்களுக்கு

பருப்புத் தேங்காய், (பலவகை) அதிரசம், சீர்முறுக்கு, திரட்டுப் பால், காப்பரிசி, கட்டிப்பருப்பு, வறுபயறு ஆகியவற்றை தயாரித்துத் தருகிறோம்.

**இனிப்புகள்:** பாதாம் அல்வா, தூத் அல்வா, கோதுமை அல்வா, சோன்பப்டி, குலாப்ஜாமூன், ரஸமலாய், லட்டு, மைசூர்பாகு, ஜாங்கிரி, தூத்பேடா, கேசரி பேடா, சாக்லட் கேக், அதிரசம், மங்களூர் போளி, தேங்காய் போளி, இனிப்பு சோமாஸ், பாதுஷா உதிரி சோன்பப்டி, முந்திரிக் கதலி, பொரி விளங்காய் உருண்டை முதலியன.

**காரம்:** கைமுறுக்கு, தட்டை, தேன்குழல், சீடை, ஸ்பெஷல் மிக்ஸர், ஓமப்பொடி, காராபூந்தி, காராசேவு, நவரத்ன மிக்ஸர், உருளைக்கிழங்கு சிப்ஸ், வாழைக்காய் சிப்ஸ், பக்கோடா, மசாலாக் கடலை, சமோசா முதலியன.

மற்றும் சாம்பார் பொடி, ரஸப்பொடி, பருப்புப்பொடி, இட்லிப்பொடி, முதலியவற்றையும் தயாரித்துத் தருகிறோம்.

## தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்னாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர்,
அடையாறு, சென்னை-600 020

போன்: 412557

காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி,
தேனாம்பேட்டை, சென்னை

# தீப்புண்ணா?

## உடனே தடவுங்கள் பர்னல்—சுட்ட புண்களுக்குச் சிறந்த சிகிச்சை.

தீப்புண்கள் வித்தியாசமானவை. தீயினாற் சுட்ட புண் தீவிர வேதனை தரும்; கொப்புளங்கள் ஆகும். அவற்றுக்குத் தேவை சிறந்ததொரு மருந்து. அதுவே பர்னல். பர்னல் குளுமை தருகிறது. இதமாக ஆற்றுகிறது. கொப்புளமேற்படுவதை உடனே தடுக்கிறது. பர்னல் ஆன்ட்டிஸெப்டிக் க்ரீம் — தீப்புண்கள் விரைவில் ஆறத் தேவையானதைக் கொண்டது.

வீட்டில் எப்போதும் வைத்திருங்கள் பர்னல்.




## பர்னல்

தீப்புண்களுக்குச் சிறந்த சிகிச்சை.

# தீர்ப்பு சொல்லுங்கள்

**வழக்கு 1:**

அகமத் ஒரு சிறிய வீட்டில் வாடகைக்குக் குடியிருந்து வந்தான். அவனுடைய வீட்டுக்காரர் அவன் தரும் வாடகைக்கு ரசீது ஒன்றும் தருவதில்லை. அதனால் அவன் வாடகையை மணியார்டர் மூலம் வீட்டுக்காரருக்கு அனுப்பி வந்தான். அப்போது தபால் தந்தி இலாகாவிற்கு தர வேண்டிய மணியார்டர் கமிஷனை வாடகையிலிருந்து கழித்துக் கொண்டு மிச்சமுள்ள தொகையையே வீட்டுக்காரருக்கு அனுப்பி வைத்தான். இது சரியா?

**வழக்கு 2:**

அரசாங்கத்திற்குச் சொந்தமான பெரிய பங்களாவில் 1500 ரூபாய் சம்பளம் பெறும் அரசாங்க அதிகாரி குடியிருந்தார். அவருக்கு வீட்டு வாடகையாக மாதம் 600 ரூபாய் செலுத்த வேண்டும் என நோட்டீஸ் அரசாங்கத்தாரால் அனுப்பப்பட்டது. தமக்கு உள்ள சம்பளத்தில் பத்தில் ஒரு பாகம் தான் வாடகையாக வசூலிக்கலாமே ஒழிய ரூ. 600 என நிர்ணயித்து வாடகை வசூலிக்க அரசுக்கு அதிகாரமில்லை என வாதாடினார் அரசாங்க அதிகாரி. இது சரியா...?

**வழக்கு 3:**

மிகச்சிறிய வீட்டிற்கு மிகப்பெரிய தொகையை வாடகையாகக் கேட்டார் வள்ளிநாயகம். அதனைக் கொடுக்க மறுத்த மருதாசலம் வீட்டுக்காரர். கேட்கும் அதிக வாடகை 'வாடகைக் கட்டுப்பாடு' சட்டத்தின் கீழ்க் குற்றமாகும். சிறிய வீட்டிற்குப் பெருந்தொகை வாடகை கேட்கும் வள்ளிநாயகத்தின் மீது குற்றம் சாட்டினார். இது சரியா...?

**வழக்கு 4:**

ஒரு வழக்கு விசாரணை நடந்து கொண்டிருக்கும் போது வழக்கறிஞர் வரதராசன் தம் கட்சிக்காரர் தமக்குத் தரவேண்டிய ஃபீஸ் பாக்கியுள்ளது. அதனால் மேற்கொண்டு வழக்கை நடத்த வர இயலாது எனக் கூறினார். அவர் கூற்றில் நியாயமுள்ளதா...?

**வழக்கு 5:**

ஐந்து வருட காலமாக ரேடியோ லைசென்ஸிற்குப் பணம் அகஸ்டின் கட்டாமல் ரேடியோ வைத்திருந்தான். அகஸ்டின் மீது குற்றவியல் நீதிமன்றத்தில் வழக்குப் போட்டார் அஞ்சல் துறை அதிகாரி. விசாரணை செய்த நீதிபதி அவருக்குப் பத்து ரூபாய் அபராதம் விதித்து விட்டு ஐந்து வருடத்திற்கான லைசென்ஸ் கட்டணத்தையும் சேர்த்துக் கட்டுமாறு உத்திரவிட்டார். பத்து ரூபாய் அபராதத்தைக் கட்டிவிட்டு லைசென்ஸ் கட்டணத்தையும் சேர்த்துக்கட்டுமாறு உத்தரவிட்டது செல்லாது என உயர்நீதி மன்றத்தில் அப்பீல் செய்தார் அகஸ்டின். வெல்வாரா...?

**விடை**

**வழக்கு 1:**

இது சரியில்லை. வாடகையிலிருந்து மணியார்டர் கமிஷனைக் கழிக்க அகமதிற்கு அதிகாரமில்லை. வாடகைப்பணம் முழுவதும் வீட்டுக்காரருக்குப் போய்ச் சேர வேண்டும்.

**வழக்கு 2:**

இது சரிதான். அரசு ஊழியர்களின் சம்பளத்தில் பத்தில் ஒரு பாகத்திற்கு மேல் வாடகையாக அரசு வசூலிக்கச் சட்டமில்லை.

**வழக்கு 3:**

இது சரி இல்லை. எந்த அதிகாரியோ, நீதிமன்றமோ, வள்ளிநாயகத்தின் வீட்டிற்கு இவ்வளவுதான் சரியான நியாயமான வாடகை எனத் தீர்மானிக்கவில்லை. அப்படி இருக்கச் சட்டவிரோதமாக அதிகமான வாடகை கேட்டார் என்ற மருதாசலத்தின் குற்றச்சாட்டு நீதிமன்றத்தில் நிற்காது.

**வழக்கு 4:**

நியாயமில்லை. கட்சிக்காரர் தமக்குக் கொடுக்க வேண்டிய தொகை பாக்கியிருக்கிறது எனக் கூறி வழக்கை நடுவே விட வழக்கறிஞருக்கு உரிமை இல்லை. வழக்கை நடத்தி முடித்து விட்டுத் தம் கட்சிக்காரர் மேல் வழக்குப் போட்டுத் தமக்குச் சேர வேண்டிய பணத்தை வசூலிக்கலாமே ஒழிய இடையே வழக்கை விடக் கூடாது.

**வழக்கு 5:**

கட்டாயம் வெல்வார். அபராதத்தொகையோடு தபால்தந்தி இலாகாவிற்குச் செலுத்த வேண்டிய லைசென்ஸ் கட்டணத்தையும் செலுத்தச் சொன்னது சரி இல்லை. தபால் தந்தி இலாக்காவிற்குப் பணம் வசூலித்துத் தரும் ஓர் ஏஜெண்டாகக்குற்றவியல் விசாரணை நீதிமன்றத்தைப் பயன்படுத்திக் கொள்ள முடியாது.

நன்றி: நீங்கள் நீதிபதியாயிருந்தால்...!
ஆசிரியர்: வை. சண்முகசுந்தரம், எம்.ஏ.பி.எல்.

—ராஜேஸ்வரி

# இன்னும் சில அறிவிப்புகள்...

சாராயக் கடைகளில் 'குடி குடியைக் கெடுக்கும்' என்று, சிகரெட் பெட்டிகளில், சிகரெட் பிடிப்பது உடல் நலத்துக்குக் கேடு என்று எழுதியிருப்பது போல இன்னும் சில எச்சரிக்கைகளை எழுதி வைக்கலாம்.

—மௌஷ்மி



ஹோட்டலில்: இங்கே சாப்பிட்டால் வயிற்று வலி, வாந்தி வரலாம். ஜாக்கிரதை.





ரயிலில்: ரயில் பயணம் உயிருக்குப் பாதுகாப்பானதில்லை.

அரசு ஆஸ்பத்திரி: இங்கே சேர்ந்த பின், உங்களுக்கு நோய் அதிகமானால் அதற்கு மருத்துவமனை பொறுப்பில்லை.




கார்ப்பரேஷன் குழாயடி: தண்ணீர் வருவது அபூர்வம். அப்படியே வந்தாலும் அது சுத்தமானது என்று உத்தரவாதமில்லை.



தியேட்டர்: ஏ. ஸி. கட்டணம் வாங்கப்பட்டாலும், ஏ. ஸி. படம் ஆரம்பித்த ஐந்து நிமிடத்தில் நிறுத்தப்படும். ஃபானும் வேலை செய்யாது. கையில் விசிறியுடன் செல்லவும்.



பஸ் ஸ்டாப்: ''பஸ் வரப்போவதில்லை; எதற்காகக் கால் கடுக்கக் காத்திருக்கிறீர்கள். நடையைக் கட்டுங்கள்.''

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran




# PHILIPS

## An exciting new composition. Arrangement by Philips.



The Philips Rack System is a perfectly compatible, technically superior and an aesthetic combination that brings you pure and powerful sound.



### 300 watts of undistorted power

That's AH 824. One of the best amplifiers available in the country today. With the most sophisticated features – like wide frequency response from 30 Hz to 20 kHz. Active tone control.

### The Electronic Turntable

AF 834. Stroboscope with pitch control. Electronic motor control. And auto return.

### The Dolby Deck

F 6121. The cassette deck with servo touch and metal compatibility.

### 3 way 3 Speaker bass-reflex system

AH 426 speakers with five segment LED bar graph to indicate power.

If music really means something to you, you've to listen to the Philips Rack System. Walk into the nearest Philips dealer's showroom and ask for a demonstration.

**Philips – the trusted Indian household name for over fifty years**

OBM/17 87

